# வைதிக தர்ம வர்த்தனீ




பிரும்மா, முராரி: திருபுராந்தகஶ்ச
பாநுஶ்ஶீ, பூமி ஸுதோ, புதஶ்ச
குருஶ்ச, ஶுக்ர:, ஶநி ராகு கேதவ:
குர்வந்து, ஸர்வே, மம, ஸுப்ரபாதம்.

மலர் 22
இதழ் 7

ஸௌம்ய ௵ சித்திரை ௴
10—4—69.

यतो धर्मः ततः कृष्णः          यतः कृष्णः ततो जयः

धर्म एव हतो हन्ति धर्मो रक्षति रक्षितः

# வைதிக தர்ம வர்த்தனீ

ஆசிரியர் : ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா,

No. 2, ஸ்டேஷன் ரோடு, W. மாம்பலம், சென்னை 33.

காரியாலயம்:–கடவாசல், கடவாசல்-சீர்காழி P. O.

சீர்காழி வழி. (தஞ்சைஜில்லா) S. India. போன் நெ. 287

வருஷ சந்தா ரூ. 6 – 50.     தனிப்பிரதி 56 பை.

மலர் 22 | ஸௌம்யஹு சித்திரைமீ | இதழ் 7

## பொருள் அடக்கம்.

# பிரார்த்தனை.

ஸ்ரீ ஸுப்ரமண்ய புஜங்க ஸ்தோத்திரம்.

इहायाहि वत्सेति हस्तान्प्रसार्या-
ह्वयत्यादराच्छङ्करे मातुरङ्कात् ।
समुपत्य तातं श्रयन्तं कुमारं
हराश्लिष्टगात्रं भजे बालमूर्तिम् ॥ १८ ॥

இஹாயாஹி வத்ஸேதி ஹஸ்தான்ப்ரஸார்யா
ஹ்வயத்யாதராச்சங்கரே மாதுரங்காத் |
ஸமுத்பத்ய தாதம் ச்ரயந்தம் குமாரம்
ஹராச்லிஷ்ட காத்ரம் பஜே பாலமூர்த்திம் ||

குழந்தாய்! இங்கே வா எனக் கைகளை நீட்டி ஆதரவுடன் அழைக்கும்பொழுது தாய் மடியிலிருந்து தாவி வருபவரும், சிவனுல் கட்டிக்கொள்ளப் பட்டவருமான பாலமூர்த்தி குமாரனை பஜிக்கிறேன்.

## மழைவர இதை 108 முறை நித்யம் ஜபிக்கவும்.

ரிஶ்ய ஶ்ருங்காய முநயே விபண்டக ஸுதாயச
நம: சாந்தாதிபதயே ஸத்ய: ஸத்வ்ருஷ |
விபண்டக ஸுத: ஸ்ரீமான் சாந்தாபதிர கல்மஷ:
ரிஶ்ய ஶ்ருங்க இதி க்யாத: மஹா வ்ருஷ்டிம்
ப்ரயச்சது ||

# ஞானபானு உதயமாகுமா ?



தற்கால பாரத நாட்டிற்கு இளைஞர், பெரியோர், பெண்கள், உழவர், வியாபாரி, அதிகாரி முதலிய பலருக்கும் நல்லறிவெனும் சூரியன் உதயமாதல் மிக அவசியமான தேவை. நாத்திகம், அவநம்பிக்கை, அவமரியாதை, வாழ்க்கையில் சிக்கல் எவ்வகையாலாவது பொருள் ஈட்டவேண்டுமென்ற அவா, பௌதிகத்தில் மோகம், நாகரிகத்தில் நாட்டம் முதலியன ஒன்றன்மேல் ஒன்ருக இருள் பூசுவதுபோல் நாட்டை 'அடர்ந்த தமஸிற்கு' ஆளாக்கியுளது. இவை அகல ஞானபானு உதயமாதல் வேண்டும்.

**தொட்டில் பழக்கம் ... ... மட்டும்.**

இளமையிற் கல் என்ற சான்ரேர் சொற்படி நல்லறிவைத் தரும் கல்வி, நல்லொழுக்கம், நற்பெயர். நற்செயல், நல்ல சகவாசம் முதலியன சிறுவயதிலேயே உண்டாகவேண்டும். பள்ளி மாணவாகளுக்கு முக்கியமாக மனதில் ஆணிவேர்போல் சிற்சில நீதிகளைத் தோற்றுவிக்க வேண்டுமென்பது ஆதிமுதலே எமது அவா. அதைப் பள்ளியில் சுமார் 30 ஆண்டுகள் மாணவர்க்கு அதையே போதித்து வந்தேன். ஒரு சமயம் அது மதக் கல்வி என்ற பெயரால் நடந்தது. அதற்கு ஊக்கமூட்ட பள்ளி அதிகாரிகள் அதில் மார்க் வாங்கவேண்டும் என்ற நியதி ஏற்படுத்தியிருந்தனர். 20 ஆண்டுகளுக்குமுன் கல்வி அதிகாரிகள் அதை விரும்பவில்லை. ஆனல் முகம்மதிய கிறிஸ்துவ பள்ளிகளிலோ மத பாட பரீட்சையில் தேறியவர்கள்தான் மேல் வகுப்புக்கு அனுப்பப்படுவர் என்ற வழக்கம் அன்றும் இன்றும் உண்டு.

அதிகாரிகளை சந்தோஷப்படுத்த மத வகுப்பு என்ற பெயரை நீக்கி நீதி வகுப்பு என்று பெயரிடப்பட்டது. தற்சமயம் அதைக் கவனிப்பார் இல்லை. ஆதலால் உலகில் அநீதி அதிகமாகிவிட்டது.

அருணோதயம்போல் தோற்றுகிறது:—

வடநாட்டிலே கோரக்பூரில் கீதா ப்ரஸ்ஸில் ஆச்சர்யமாக மத ப்ரசாரம் நடப்பதை சிலர் அறிந்திருக்கலாம். தற்சமயம் அவர்கள் இளைஞர்களுக்கு நீதி கற்பிக்க சிற்சில சிறிய நூல்களை வெளியிடுகின்றனர். நமது பாக்கியத்தினுல் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் எண்ணிறந்த தர்மத் தொண்டுகள் நாட்டிற்குச் செய்து வருகிருர்கள். அதில் கோரக்பூர் நூல்களையும் தமிழ்ப்படுத்தி அச்சிட்டு அனைவரும் படிக்கும்படி வெளியிட முயற்சி செய்கிருர்கள். இதைத்தான் நாட்டிற்கு அருணோதயம் என்ருேம்.

அருணோதயம் ஆனுல் சிறிது வெளிச்சம் தோன்றும். விரைவில் ஞானபானு உதயமாவான். உலகம் உய்யும். ஆனுல் அருணோதயத்திலும் கண்ணைத் திறவாமல் போர்வையை இழுத்து போர்த்திக்கொண்டு தூங்காமல் இருக்கவேண்டும்.

இன்றே செய்க! நன்றே செய்க!

நாட்டிற்கு விசேஷமாக தென்னுட்டிற்கு வேண்டியது மழை. இது ஒரு மதத்திற்கோ, ஒரு இனத்திற்கோ மாத்திரமல்ல. புல் பூண்டு பசு பட்சி மிருகம் முதலிய அனைவர்க்கும் அவசரமாக வேண்டிய தேவை.

1. அவரவர் மதப்படி ஆண்டவனை வேண்டுங்கள்.
2. வேள்விபுரிவோர் காரீரேஷ்டி செய்யுங்கள்.
3. பௌராணிகர் விராடபர்வ பாராயணம், கதை செய்யுங்கள்.
4. தமிழபிமானிகள் தமிழ்ப் பாசுரங்களைப் படியுங்கள்
5. மற்ருேர், தசரதன் செய்த சனிஸ்துதியைப் படியுங்கள்.
6. கிராமத்திலுள்ளோர் கிராம தேவதைகளை பூஜை செய்யுங்கள்.
7. "காலே வர்ஷது பர்ஜன்ய:" என்ற மந்த்ரத்தை அன்றன்று 1000 முறை ஜபியுங்கள்.

சுபம்.

# சித்திரை மாஸ விசேஷம்.

ஸௌம்ய௵ உத்தராயணம் வஸந்தருது.

(ஸ்ரீ ஆசார்யாள் மடத்து பஞ்சாங்கத்தை அநுசரித்தது)

ஸ்ரீ ஸௌம்ய வருஷம் சித்திரைமீ 1௳ 14—4—69 திங்கள் தமிழ் வருஷப்பிறப்பு பண்டிகை, தர்ப்பணதினம் நூதன பஞ்சாங்க படன சிரவணம்.

குறிப்பு : No. 28, வாக்கியபடிக்கு:

[ஸ்ரீ ஸௌம்ய௵ சித்திரைமீ 1௳ ஞாயிறு 13–4–69 சதயம். தமிழ் வருஷப்பிறப்பு, பண்டிகை. நூதந பஞ்சாங்க படன சிரவணம். தர்ப்பணம்.]

3௳ புதன் : ரேவதி, அமாவாஸ்யை.

8௳ திங்கள் : ஸ்ரீ சங்கரஜயந்தி.

15 ௳ திங்கள் : ஏகாதசி.

16௳ செவ்வாய் : பிரதோஷம்.

18௳ வியாழன் : சித்ராபௌர்ணமி.

25௳ வியாழன் : சிரவண உபவாஸம்.

29௳ திங்கள் : ஏகாதசி.

30௳ செவ்வாய் : பிரதோஷம்.

## ஸௌம்ய௵ நவநாயகர்கள்.

ராஜா—புதன், மந்திரி—ரவி, ஸேநாதிபதி—சனி, ஸஸ்யாதிபதி—புதன், தான்யாதிபதி—சந்திரன், அர்க்க மேகாதிபதி-சனி, ரஸாதிபதி-குரு, நீரஸாதிபதி—குஜன்.

### நவநாயகர்கள் பலன் :

ராஜா—புதன் : காற்று மிகுந்து மழை குறைவுபடும். யாகங்கள் நடைபெறு. அரசாங்கம் சினம் கொள்ளும். பிற்பயிர் நன்மை. எழுத்தாளர்கள் விருத்தி யாவார்கள்.

மந்திரி—ரவி: அரசாங்கத்திற்குள் பரஸ்பர விரோதமும் அனுவிருஷ்டியும், அதர்மமும் ஓங்கும்.

ஸேனாதிபதி—சனி: அதர்மத்தில் அதிக பற்றுதல், மனிதர்கள் ஹீனத்தொழில் புரிவதுடன் பரஸ்பர கலகமும் செய்வார்கள்.

ஸஸ்யாதிபதி—புதன்: மத்யம மழை. மத்யமாகக் காய் கறி உற்பத்தி, மேகங்களுக்கு காற்றினால் கெடுதல், ஜனங்களுக்கு அதிக பயம்.

தான்யாதிபதி—சந்திரன்: பசுக்கள் நல்ல பால்கறக்கும் ஜனங்களுக்கு வியாதியின்மை, நல்ல மழையால் நாடு பலமடைதல்.

அர்க்க, மேகாதிபதி—சனி: கண்ட வர்ஷமாக மழை பெய்து, விளைவு குன்றி, கருப்பு தான்யம் விருத்தி யடையும்.

ரஸாதிபதி—குரு: நல்லமழை, பயிர் விருத்தி, விருக்ஷங்கள் நன்கு பலிதம், சுபிக்ஷம், ஆரோக்யம் இவை நிகழும்.

நீரஸாதிபதி—குஜன்: சந்தனம், அகில், கஸ்தூரி, பவழம் மற்றும் சிவப்பு வஸ்துக்கள் விலையேறும். பசுநாயகன் – பலபத்திரன்.

---

# தார்மிகச் செய்திகள்.

*கயாப்ரயாக :—* இதைத் திருப்பிப் படித்தாலும் மாறுமல் கயாப்ரயாக என்றே வரும். இந்துக்களுக்கு காசி கயா ப்ரயாக என்ற மூன்று இடங்களும் மிக மிக முக்கியமான ஸ்தலங்களாகும். ப்ரயாகையில் தீர்த்தம்தான் தனியாக வரும் கங்கையில் எடுக்க வேண்டும். அலஹாபாத்தின் சமீபத்தில் தாராகஞ்ச் என்ற ஸ்டேஷன் அருகே உள்ள ஒரு மிகப் புண்ய க்ஷேத்ரமிது. கங்கை யமுனை என்ற இரு புண்ய நதிகளும் ஒன்று சேருமிடமிது. அதனுள்ளே வெளியே தெரியாமல் ஓடுவது ஸரஸ்வதி நதியாம். அதைத் திரிவேணி என்றும் அழைப்பார்கள். யாத்திரைக்குச் செல்லும் ஒவ்வொருவரும் அங்கே வபநம் செய்துக்கொள்ள வேண்டும். ஸ்திரீகளாகுல் தலை பின்னல் நுனியில் ஓரங்குல நீளம் கத்தரித்து த்ரிவேணியில் போடுவது வழக்கம். பிரதி தினமும் அங்கு ஒரு டன்னுக்குக்குறையாமல் கேசம் வந்து விழும் என்றாலும் ஒன்றேனும் அடியில் தங்குவதில்லை. அங்குள்ள கோட்டையில் ஸப்த ரிஷிகள் மற்றுமுள்ளவரது விக்ரஹம் பூர்ண புருஷ அளவிற்கு கண்ணைக்கவருகின்றன. ஆங்கு நம்மவர் தங்க ஸ்ரீ வெங்கடேசுவர சாஸ்திரிகள் அமைத்த மடம் ஒன்று தான் இருக்கிறது.

வெகு நாட்களாக அங்கு நம்மவர் தங்கி தர்சிக்க வைதிக கார்யங்களைச் செய்ய ஓர் இடமில்லாத குறை இருந்தது. சமீபத்தில் டில்லி சங்கர ஸம்ஸ்க்ருத அகடமியின் ஆதரவால் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் மடம் என்று ஓர் அரிய ஆலயம் அமைக்க ஆரம்பிக்கப்பட்டுளது. இங்கு ராமேஸ்வரத்தில் உள்ளதுபோல ஆதி சங்கரரின் பெரிய சிலை ஒன்றும் அங்குள்ளதுபோல் மற்ற எல்லாம் அமைக்கப்படும் என்றும் அறிகிறோம். தற்கால பீடாதிபதிகளின் ஆசீர்வாதத்தால் பக்தர்களுக்கு பலவகையான நன்மைகள் ஏற்படுகின்றன. அவைகளைப் பயன் படுத்திக் கொள்ளாவிடில் அது நமது துரதிர்ஷ்டம் தான்.

*சங்கரர் வாழி! பக்தர்கள் வாழி !!*

ஜகத்குரு ஸ்ரீ சிரிங்கேரி ஸ்வாமிகள் அம்பத்தூர் ஸ்ரீ புவனேஸ்வரி பீடத்தை அலங்கரித்து ஸ்ரீ மௌன ஸ்வாமிகளால் வரவேற்கப்பட்டு அழகாக உபன்யாசம் செய்தார்கள்.

## ஸ்ரீ பூர்ணாநந்த நாத ஸ்ரீ வித்யா பீடம்

59, தம்புசெட்டி தெரு, சென்னை – 1.

ஷை பீடத்தின் சார்பில் கீழ்க்கண்ட விசேஷங்கள் குறிப்பிட்ட தினங்களில் நடைபெறும்.

### விசேஷ பூஜைகள்:

13—4—69 மாலை: ஸௌம்ய வருஷப் பிறப்பு, நூதன பஞ்சாங்க ச்ரவணம், பானக பூஜை.

1—5—69 இரவு: தேவீநவாவரண பூஜை.

2—5—69 இரவு: கணபதி சுப்ரஹ்மண்ய பூஜை.

இப்பீடத்தைச் சேர்ந்த அன்பர்கள் ஷை விசேஷங்கட்கு வந்திருந்து பிரஸாதத்தை அடையுமாறு கோரப் படுகிறார்கள்.

இப்படிக்கு,
பீடத்தின் சிஷ்யர்கள்.

---

### க்ஷமிக்கவும்.

நாளுக்குநாள் தவறுகள் அதிகமாகி வருகின்றன. முடிந்தவரை, திருத்த முயற்சிக்கிறோம். உடல் நிலையையும் பத்திரிகை கஷ்டத்தையும் கவனித்து க்ஷமிக்கவும்.

### தயவு செய்து மரவாதீர்.

சந்தா பாக்கியை தவறாமல் உடனே M O. செய்யவும். அதில் உங்கள் சந்தா நெ. அல்லது புதியதா? பழையதா? என்பதை மறக்காமல் எழுதவும். சந்தா தொகையை நேரடியாக கடவாசலுக்கே அனுப்பவும். தனி புஸ்தகங்களுக்கு மாத்திரம் இங்கு எழுதவும். புஸ்தக விலையை கவனியாமல் ஸ்டாம்பு அல்லது M. O. அனுப்பாதீர்கள். திருத்திய விலையையும் புக்போஸ்டுக் குறிய ஸ்டாம்பையும் சேர்த்தனுப்பவும்.

# ஸ்ரீ உத்தர ராமாயணம்.

## மால்யவான் பிறப்பு ( 5 வது ஸர்க்கம்)

உடையாளூர் பாலவால்மீகி ஸ்ரீ ராமமூர்த்தி சர்மா.

க்ராமணீ என்ற கந்தர்வ மன்னன், தார்மிகனை சுகேசனுக்கு தேவவதியைத் (தன் பெண்ணை) திருமணஞ் செய்து மகிழ்ந்தான். த்ரேதாக்னிக்கு நிகரான மூன்று புதல்வர்கள் உண்டானார்கள். மால்யவான், சுமாலி, மாலி என்பதே அவர்களின் பெயர்கள்,

இவர்கள் நான்முகனைத்தவத்தால் தர்சித்து, எதிரிகளால் வெல்லமுடியாத வலிமை, நீண்ட ஆயுஸ் முதலிவை பெற்று மூன்று உலகங்களையும் ஹிம்ஸித்தார்கள். விச்வ கர்மாவை, தங்களுக்குச்சிறந்த நகரம் நிர்மாணிக்கவும் உத்தரவிட்டார்கள்.

விச்வகர்மா, ஓ அரக்கரசர்களே! கடலுடையத் தென் கரையில், த்ரிகூட மலை உள்ளது. அதன் அருகில் சுவேலகிரியும் இருக்கிறது. அதனுச்சியில் வானவர்க் கோனுக்காக என்னால் கட்டப்பட்ட பட்டினம் மிகச்சிறப்பாக விளங்குகிறது. 300 மைல் அகலமும், ஆயிரம் மைல்கள் நீளமும் கொண்டது' அது. அமராவதி போன்ற அந்நகரில் நீவிர் சுகமாக வஸிக்கலாமென்றார்.

அவர்கள் அங்கேச் சென்று சீரும் சிறப்புமாக வஸிக்கத் தொடங்கினர். மூவரும் நர்மதா கந்தர்வியின் பெண்களை திருமணம் புரிந்து கொண்டார்கள். மால்யவானுக்கு சுந்தரியினிடம், 5 பிள்ளைகள். வஜ்ரமுஷ்டி, விருபாக்ஷதன், துர்முகன், சுப்தக்னன், யக்ஞகோபன், மத்தன், உன்மத்தன்,— அநலா என்ற புதல்வியும் பிறந்தார்கள். சுமாலிக்கு, மைந்தர்கள், பிரஹஸ்தன், அகம்பனன், கேதுமதியிடம், விகடன், காலகார்முகன், தூம்ராக்ஷன், தண்டன், சுபார்ச்சுவன், ஸம்ஸ்ராதி, ப்ரகஸன்.

பாஸகர்ணன் என்ற பெயர் கொண்டவர்கள். ராதா புஷ்போத்கடா, கைகஸீ, கும்பீநஸீ என்ற நான்கு பெண்கள் —

மாலிக்கும், வசுதையிடம், அனிலன், அனலன், ஹரன், ஸம்பாதி, என்ற நான்கு குமாரர்கள் உண்டானர்கள். இவர்களே விபீஷண ஸ்வாமியின் அமைச்சர்கள்.

மூன்று அரக்கர் தலைவர்களும், இன்னும்பல மைந்தர்களையும் அடைந்து மற்ற ராக்ஷஸர்களுடன் உலகை மிகவும் துன்புறுத்தினர். அவர்களால் அல்லல் அடைகின்ற வானவர், முனிவர் மற்றவரும் மஹாதேவரை சரணமடைந்தனர்.

பிரும்மாவின் வரச் செருக்கினால் சுகேச புதல்வர்கள் ஆச்ரமங்களை அழித்து தேவரை ஸ்வர்க்கத்திலிருந்து தள்ளிவிட்டுத் தானே தேவர்களாக அங்கே இன்பமெய்தினர்.

अहं विष्णुः अहं रुद्रो ब्रह्महं देवराडहम् ।
अहं यमश्च वरुणः चन्द्रोहं रविरप्यहम् ॥

நான் திருமால், நான் அசுரன், நான் அயன் நானே தேவராஜன், நான் யமன், நான் வருணன், நான் சந்திரன் நான் கதிரவன், என்றே கூறுகின்ற அவர்கள் மிகவும் எங்களை ஹிம்ஸிக்கின்றனர். தாங்கள் அபயமளிப்பீராக. பயங்கர சரீரமெடுத்து அவர்களை அடக்கவேண்டும்— என்றனர்;—

பரமசிவம், சுகேச மைந்தர்களை நான் கொல்லுவதில்லை, என்று வரமளித்திருக்கிறேன். நீங்கள் யாவரும் தேவேந்திரனை முன்னிட்டுக்கொண்டு ஸ்ரீமந் நாராயணனைச் சரணமடைந்து வேண்டிக்கொள்ளவும். இப் பிரபு அழித்துக் காப்பார் என்பதில் ஐயமில்லை.

அமரர்கள் கைலயங்கிரிநாதனை வணங்கி விடைபெற்று வைகுண்டநாதனை அபயம் அபயமென்று அடைந்தனர். ஹே! ப்ரபோ, த்ரேதாக்னிக்கு நிகராக ஜ்வலிக்கும்

சுகேசதனயர்கள் எங்கள் ஸ்தானங்களைப் பிடுங்கி ஹிம்ஸிக்கின்றனர். நீரே கதி எங்களுக்கு, நீர் விரைவில் எம்மைக் காத்தருள்க—என்றனர்.

ஸ்ரீ நாராயணன், அஸுரர்களை அழித்து ரக்ஷிப்ப தாக வாக்களித்தார். இதை அறிந்த மேதாவியான மால்ய வான் தன் இரு ஸஹோதரர்களிடமும்-கீழ்க்கண்டபடி கூறினான். "ஹிரண்யகசிபு, நமுசி, காலநேமா, ஸம்ஹ லாதன், ராதேயன், சும்பநிசும்பர், மற்றும் பல அசுரர் கள், பெரிய மாயாவிகளாக இருந்தவர்கள், வைகுண்ட நாதனால் வதம் செய்யப்பட்டவர்கள் என்பதை நினைத்து ஆலோசனை புரியவேண்டும். நம்மையும் கொல்ல திரு மால் நம் எதிரிகளுக்கு ப்ரதிக்ஞை செய்திருக்கிறார்"—

சுமாலி, மாலி, என்ற இருவரும் தன் தமையனால் கூறப்பட்டதைக்கேட்டுக் கூறுகின்றனர். நற்காரியங்கள், நல்ல தானங்கள், நிறையச்செய்து செல்வம் நீண்ட ஆயுஸ், லங்காபுரி இவைகளை அடைந்தோம். விஷ்ணு ருத்ர தேவேந்திராதி வானவர் வெல்லப்பட்டனர் — இப் பொழுது நாராயணனுக்கு நம்மிடம் வைரத்திற்கு காரணம் ஏதுமில்லை, லக்ஷ்மீகாந்தன் மனதை அமரர்கள் கலக்கி விட்டிருக்கிறார்கள். அந்த தேவரனைவரையுமழிக்க விரை வில் போருக்குக் கிளம்புவோம் — என்றனர்.

அகஸ்தியர் — ஏ ராம, இவ்வண்ணம் ஆலோசித்த ராக்ஷஸர்கள் ஸைன்யங்களுடன் தேவருலகை முற்றுகை யிட்டுப்போர்புரியவும் தொடங்கினர். பல அபசகுனங்கள் உண்டாயின — மால்யவான் மலைபோன்ற மால்யவானை ஆச்ரயித்து சுமாலி மாலி முதலான அரக்கர்கள் புரியும் அட்டஹாஸத்தை அறிந்த எம்பெருமான், கருடன்மீது ஏறி பீதாம்பரமணிந்து சங்கம் சக்கரம் சார்ங்கம் ஏந்திய வனுவும் போர்புரியலானார்கள்.

மேகங்கள் மலைமேல் மழை பொழிவதுபோல் ராக்ஷஸ மேகங்கள் நாராயணனாகிற கிரிமேல் பாண மழை வர்ஷித்தனர். கறுத்த அரக்கக் கூட்டங்களிடையே எம்பெருமான் மை மலைபோல் விளங்கினார்.

பூச்சிகள் வயலையும் ஈக்கள் மலையையும் பாம்புகள் அமுத கலசத்தையும் முதலைகள் கடலையும், அடைவதைப் போல் அரக்கரின் வில்லிலிருந்து கிளம்பிய சரங்கள், வஜ்ரம், காற்று, மனம், இவைகளைப் போன்ற வேகத்துடன் ஹரிநாராயணனை அடைந்தன. யானை, குதிரை, தேர் இவைகளில் ஏறிக்கொண்டு ராக்ஷஸர்கள் மூச்சு விடமுடியாமல் பகவானை, ப்ராணாயாமங்கள் செய்கின்ற அந்தணனைப்போல், திணற அடித்தனர். வைகுண்ட நாதன், சார்ங்கமெடுத்து சரமழைபொழிந்து அரக்கர் கூட்டத்தை அலற அடித்து பாஞ்சஜன்ய மென்ற தன் சங்கத்தை ஊதினார். சிங்கத்தின் கர்ஜனை யானைகளை பயமுறுத்துவதுபோல் சங்கராஜநாதம் எதிரிகளைப் பதற வைத்து, யானைகள் குதிரைகளும் இங்குமங்கும் ஓடின. ரதத்திலிருந்து வீரர்கள் விழுந்து கதறினர். கதிரவனிடமிருந்து கிளம்பிய கிரணங்கள்போல், கடலிலிருந்து எழும்பிய அலைகள்போல், மலையிலிருந்து வருகின்ற யானைகள்போல். மேகத்திலிருந்து விழுகின்ற மழைத் திவலைகள்போலும் சார்ங்கம் விட்ட அம்புகள் பிரகாசித்தன, சாபத்தினால் ஸிம்ஹகன் போலவும், சிங்கத்தினால், யானைகள் போலவும், யானையால் புலிகள்போலவும், ராக்ஷஸர்கள் பகவானால் அடிக்கப்பட்டு பயந்தோடினர். பகவான் பாஞ்சஜன்யத்தை மீண்டும் ஊதினார். ஸுமாலி ஹரியை, பனி ஆதவனை மறைப்பதுபோல் சரங்களால் மறைத்தான், விஷ்ணு, மாலியின் தேரோட்டியைக் கொன்றதும் புலன்களை அடக்காத மனிதன்போல் பதறினான். முடிவில் சக்ரபாணி, சக்கிரத்தால் மாலியின் சிரத்தை அறுத்து வானவர் முனிவர் அனைவராலும் புகழப்பட்டு விளங்கினார். கருடனும் மற்ற அரக்கர் கூட்டத்தைக் கொன்று தள்ளினார்.

## 8-வது ஸர்க்கம்.

## மால்யவானின் மகத்தான தோல்வி

கரைதடுத்து திரும்பிய கடல் அலைகள்போல், மால்யவான் தனது ஸேனை அழிவதைக்கண்டு மனங்கலங்கி

திரும்பி நாராயணனைப் பார்த்து ஹே நாராயண ஓடு கின்ற அரக்கர்களைத் துரத்தி அடிப்பது தர்மமா? அசுரர் கள் இவ்வாறு தர்மமெனச் செய்வார்கள் — ஆனால் நீ செய்யலாமா? நான் உன்னுடன் போர் செய்யவந்துவிட் டேன் என்றான் — உங்கள் தொல்லை தாங்காது சரண மடைந்த வானவருக்கு "ராக்ஷஸ நாசம்" செய்வதாக வாக்களித்திருக்கிறேன். ஆகவே எங்கே ஓடி நீங்கள் பதுங்கினாலும் அழிப்பதுவே உத்தம தர்மம்—

N B:—ஸ்ரீவேதாந்த தேசிகர், சரணாகதியின் பெரு மையை எடுத்துக்காட்டும் தனது அபய ப்ரதான ஸார மென்ற மணிப்ரவாள நூலில், சரணாகதி தாத்பர்ய ப்ர பஞ்சமென்ற மூன்றாவது அத்யாயத்தில், உத்ர காண்ட 8-வது ஸர்க்கத்தில் நாராயணன் கூறியதை அழகாக எடுத்துக்காட்டிருக்கிறார்.

ரஸிகர்களான வாசகர்களுக்கு—அந்த வாக்யங்களைக் கீழே தருகின்றோம்.

"உத்தர ஸ்ரீ ராமாயணத்திலும் ராவணன் பாட்டன் மார் காலத்திலே விஷ்ணு அவதார ஸ்தனான ஸர்வேச் வரன் சரணாகதரான தேவர்களை ரக்ஷிப்பதாகத் திருவுள் ளம் பற்றி ராக்ஷஸரோடே பொருதவளவிலே, பூசலி லே கெட்டு பராங்முகராய் லங்கையைக் குறித்துப் பலா யனம் பண்ணுகிற ராக்ஷஸரைப் பின்தொடர்ந்து சார்ங்க முதைத்த சரமழைகளாலே கொன்று சூறையாடக் கண்ட மால்யவான் புரிந்து ஓடிப்போகிற எங்களைக் கொல்லுகை க்ஷத்ர தர்மவிருத்த மன்றோ? தர்மம் அறியாதார் செய்யும் தர்மத்தை தர்மக்ஞனான நீ, செய்யா நிற்கிறதென்று ஆற்றாமையாலே முறையிட ஸர் வேச்வரன், 'நாம் க்ஷத்ரியராகில் அன்றோ க்ஷத்திரிய தர் மம் அனுஷ்டிப்பது? நம்மை நாராயணன் என்று நீ சொன்னபடியே நாம். நியந்த்ருத்வாதிகளாலே ஸர்வ விலக்ஷணராகையால், நாராயண — தர்மமான சரணாகத ரக்ஷணம் அனுஷ்டிக்கிறோம் என்று அபிப்ராயம்கொண்டு

"யுஷ்மத்தோ..................ரஸாதலகதாநபி" என்று நாம் தேவர்களுக்குப் பண்ணின அபயப்ரதானத்தாலே பசுக்களுக்காகப் புலிகளைத் தொடர்ந்து கொல்லும் கணக்கிலே உங்களைக் கொல்லுகிறோம் என்று அருளிச்செய்த பாசுரத்தாலே மற்றுமுள்ள க்ஷத்ரிய - தர்மாதிகளிலும் காட்டில் சரணாகத - ரக்ஷண - தர்மமே பெருமாளுக்கு அனுபாலநீயம் என்னுமிடத்தை ஸ்தாபித்தான்.

(1. போர்செய்த அளவிலே. 2. யுத்தம், 3. அனுஷ்டிக்கவேண்டியது.) இப்படிச் சொன்ன மாதவன் மார்பில் மால்யவான் சக்தி ஆயுதத்தை எறிந்தான். சக்திதரனை ஸ்கந்த பெருமானுக்கு ப்ரியரான எம்பெருமான் அதையே மால்யவான்பேரில் ப்ரயோகித்தான். மறுபடியும் போர்செய்து கருடனாலும் அடிபட்டு அலறி பின்வாங்கி ஸுமாலியுடன் லங்கைமா நகருக்கு வந்துசேர்ந்தான். செந்தாமரைக் கண்ணா! ராகவ! இப்படி வைகுண்ட நாதனால் வெல்லப்பட்ட அரக்கர்கள் பயந்து லங்கையை விட்டு பாதாளத்தில் ஸுமாலி மால்யவானையும் ஆச்ரயித்து வெகுகாலம் வெளிக்கிளம்பாமலே வஸித்து வந்தார்கள். ராவணாதிகளைக் காட்டிலும் பலசாலிகள் அவர்கள், சங்க சக்ரதாரியான பகவானைத் தவிர்த்து யாரால் ஜெயிக்க முடியும் ஸ்ரீமந் நாராயணனே நீங்கள். குறைந்த தர்மத்தை நிலைநிறுத்த தகுந்தகாலத்தில் அவதரித்து அண்டினவர்களைக் காத்து வருகிறாய் — இராவணாதிகளின் தோற்றத்தை, இனி உரைக்கின்றேன் ராகவா!

## 9–வது ஸர்க்கம்

ஒரு சமயம் தன் புதல்வியுடன் ஸுமாலி பூலோகத்தில் உலாவினான். புஷ்பக விமானத்தில் செல்லும் வைச்ரவணனைக் கண்டு ஆலோசித்துத் தன் பெண்ணிடம் கூறினான். குபேர! பிதாவான விச்ரவஸை நீ திருமணம் செய்து கொண்டால் குபேரனைப் போன்ற மைந்தர்களைப் பெறுவாய் — அரக்கர் குலமும்

சீர்மைபெற்று பிரகாசிக்கும். தன் தந்தையின் வார்த்தையைக் கேட்ட கைகஸி, ஸந்தியாகாலத்தில் மூன்று அக்னிகளை உபாஸித்து நான்காவது அக்னியாக ஜ்வலிக்கின்ற விச்ரவஸின் அருகே சென்று நின்றுகொண்டு கால் கட்டைவிரலால் நிலத்தைக் கீறிக்கொண்டு மிருந்தாள். முனிவர் கேட்டபின் தன் வரலாறுகூறி வந்த காரணத்தை நீரே அறிந்து கொள்வீர். இதை மொழியால்பேச இயலுமா என்றாள். விச்ரவஸ் - ரூபவதியான மங்கையே, உன் அவாவை அறிந்துகொண்டேன். வந்த ஸமயம் — ப்ரதோஷகாலம் — ஆகவே பயங்கரமான பிள்ளைகளை அடைவாய் என்றார். கைகேஸி பணிவுடன் மிகவும் வேண்டவே மஹரிஷி கடைசியான புதல்வன் தர்மாத்மாவாக விளங்கட்டுமென்று அருள்புரிந்தார்.

பிறகு விரைவில் கைகேஸிக்கு, பயங்கரமான வடிவத்துடன் பத்து தலைகொண்ட ஒரு சிசு ஜனித்தது. அச்சமயம் பல உத்பாதங்கள் விண்ணிலும், மண்ணிலும் உண்டாயின. தசக்ரீவன் என பெயரிடப்பட்டது. இரண்டாவதாக பெரிய தேஹத்துடன் ஜனித்தவனே கும்பகர்ணன். மூன்றாவதாக விகார வதனத்துடன் சூர்ப்பனகை என்ற பெண்ணும் பிறந்தாள். அவளுக்குப்பின் தோன்றியவனே விபீஷணன். வானவர் மலர்மாரி பொழிந்தனர் — தேவ துந்துபி முழங்கியது. தபோவனத்தில் வளர்ந்த தசக்ரீவனையும் கும்பகர்ணனையும் கண்டு அவர்களின் தேஜஸைப் பார்த்த அனைவரும் அச்சமடையத் தொடங்கினர், கும்பகர்ணன் தன் தேகபலத்தாலே தர்மசீலர்களை ஹிம்ஸித்தான். விபீஷணன் வேதங்களை ஓதிப் புலன்களை அடக்கி தர்மாத்மாக புகழப்பட்டான். தன் தந்தையை தர்சிக்க வந்த குபேரனைக்கண்ட கைகேசி கூறியபடி, வைச்ரவணனுக்கு நிகராக விளங்க, கோகர்ணக்ஷேத்திரத்தில் ஸஹோதர்களுடன் கோரதவம்செய்து நான்முகனிடம் நிகரில்லாத வரன்களையும் பெற்றான் — ராகவா !.

## 10–வது ஸர்க்கம்.

## பிரும்மாவினிடம் வரம்பெற்றது.

கும்பகர்ணன் 10 ஆயிரமாண்டுகள், கோடைகாலத்தில் அக்னி நடுவிலும், குளிர்காலத்தில் நீரிலும் இருந்து நல்லோர்வழியைப் பின்பற்றித் தவம்புரிந்தான்.

விபீஷணனே, 5 ஆயிரம் வருடங்கள், ஒற்றைக் காலில் நின்றுகொண்டு தர்மத்திலேயே புத்தியை லயிக்கச்செய்து தவஞ்செய்தான் – பின்பு ஐயாயிரமாண்டுகள் வேதமோதிக்கொண்டே கதிரவனைப்பின்தொடர்ந்து கடும் தவம் புரிந்தான். இந்த பதினையிரமாண்டுகளும் அவனுக்கு தேவேந்திரனின் நந்தவன வாஸம்போல் இன்பமாகவே கழிந்தன. உணவின்றி தவஞ்செய்யும் தசக்ரீவன், ஆயிரமாண்டுகளுக்கு ஒருமுறை தன் சிரத்தை அறுத்து நெருப்பில் ஹோமம் செய்வான். கடைசியாக, பத்தாவது தலையை அறுக்க எண்ணியபோது பிரும்மதேவர் நேரில் தோன்றி, கோரியவரத்தைப் பெறுவாயாக என்றார்.

இறவாத வரத்தைத் தர இயலாதபிரும்மதேவரிடம். தேவர்களிடமிருந்து மரணமின்மையைப் பெற்றான். மனிதர்களை லக்ஷ்யம் செய்யவில்லை தசக்ரீவன் — தீயில் சாம்பல் ஆன தலைகளும் முளைக்கச் செய்து நினைத்த வடிவத்தை எடுக்கு மாற்றலையும் அளித்தார் பிரும்மதேவர்: —

விபீஷண ஸ்வாமியோ — தன்னிடம் பேரன்பு காட்டும் வாணீசரிடம், எத்தனை இன்னல்கள் வந்தாலும் என்மனம் தர்மத்திலேயே நிலைபெற்று அசையாமல் இருக்கவேண்டும், கற்றுக்கொள்ளாத பிரும்மாஸ்திரம் கிட்டவேண்டும், வர்ணாச்ரமத்திற்கு மாறுதலில்லாத புத்தி எப்பொழுதும் பிரகாசிக்கவே எனக்குப் பேரவா—அறத்தில் அழுத்தமான புத்தியுள்ளவனுக்கு அகில உலகங்களிலும் கிடைக்காத பலன் உண்டோ?

"நஹி தர்மாபி ரக்தானும்
லோகே கிஞ்சன துர்லபம்"

இதைக்கேட்ட பிரும்மா மகிழ்ந்தவராக, அரக்கர் குலத்தில் தோன்றி உனக்கு அதர்மத்தில் புத்தி செல்லவில்லை விரும்பியதையும் அளித்தேன், அமரத்வத்தையும் (மரணமின்மை) அளிக்கிறேன் என்றார். வரம்வாங்குவதற்கு முன்னரே பலரை பக்ஷித்த கும்பகர்ணனுக்கு வரமளிக்கக் கூடாது ஸ்வாமி என்றார்கள். தேவர்கள் பிரும்மதேவனிடம் – வாணீதேவியால் மோஹிக்கப்பட்ட கும்பகர்ணன், பல ஆண்டுகள் இடையூறின்றித் துயில் புரிய வரம்கேட்டுப்பெற்றபின் வருந்தினான். மூவரும் பிதாவின் அருகில் சென்று வஸிக்கலானார்கள்.

---

# ஸ்ரீ சங்கரீ ஸங்கீதம்

அல்லது

# ஸ்ரீ அம்பாள் அஷ்டபதி.

---

लय समये जल राशौ रक्षसि मग्नम्

जगदुपकृतये वेदमभग्नम् ।

धूमावति मीनदेहे जयजगदम्ब ! शिवे ॥ ८ ॥

லயஸமயே ஜலராசௌ

ரக்ஷஸிமக்னம் — ஜகதுபக்ருதயே

வேதமபக்னம் — தூமாவதி மீனதேஹே

ஜய ஜகதம்ப சிவே.

உலகெலாம் ஒடுங்கும்படியான ப்ரளய காலத்தில் ஸமுத்ரத்தில், மூழ்கிப்போன வேதத்தை, குறைவின்றி அகிலஉலகமும் உய்வதற்காகக் காப்பாற்றிய மீனுருவங் கொண்டவளே! '' தூமாவதி '' என்கிற பெயரையுடையவளே! உலகமாதாவே! மங்களமே உருவாகியவளே! போற்றி! போற்றி!

तव पृष्ठे विपुले सचराचर कीर्णा

सन्ततमस्ति धरणिरविशीर्णा ।

बगलामुखि कमठरूपे

जयजगदम्ब शिवे ॥ ९ ॥

தவப்ருஷ்டே விபுலே — ஸசராசரகீர்ண்ணு
ஸந்ததமஸ்தி — தரணிரவிசீர்ண்ணு
பகளாமுகி கமடரூபே — ஜயஜகதம்ப சிவே ॥

மந்தர மலையைத்தாங்க ஆமையுருக் கொண்ட "பகளாமுகி," என்ற நாமங்கொண்ட தாயே? அகன்ற உன் முதுகில், ஜங்கம ஸ்தாவராத்மகமான பூமியானது கெடுதலின்றி நிலைபெற்றுள்ளதே! தாயே! போற்றி! போற்றி!

खरनखरं तव करकमलं परमकृशम्
हिरण्य कशिपुं दारयति भृशम् ।
छिन्नमस्ते ! नृहरितनो ! जयजगदम्ब ! शिवे ॥१०॥

கரநகரம்தவ — கரகமலம் பரமக்ருசம்
ஹிரண்யகசிபும் — தாரயதிப்ருசம்
ச்சின்னமஸ்தே — ந்ருஹரிதனோ
ஜயஜகதம்ப சிவே ॥

செந்தாமரை போன்ற உன் கைகளின் கூர்மையான நகங்களினால், ஹிரண்யகசிபுவின் மார்பைப் பிளந்தவளே நரஸிம்ம ரூபமெடுத்தவளே! கூரிய நகங்களைக் கொண்டதும், தாமரை போல் மிருதுவானதும் மிகவும் சிறியதுமான உன் கைதான் கொடிய ஹிரண்யகசிபுவை பிளந்தது. "ச்சின்னமஸ்த்தா" என்று பெயர் கொண்ட ஸ்ரீ தேவியே? போற்றி! போற்றி!

करुणारसमपहाय बलिं निजदासम्
अमरकृते गमयसि फणिवासम् ।
भुवनेश्वरि ! वामनतनो ! जयजगदम्ब ! शिवे ॥ ११

கருணாரஸமபஹாய — பலிம் நிஜதாஸம்
அமரக்ருதே — கமயஸி பணிவாஸம்
புவனேச்வரி — வாமனதனோ-ஜயஜகதம்ப சிவே ॥

அரக்கர்களின் கொடுமையால் துன்புறும் தேவர்களைக் காக்கவேண்டி - உன் நிஜ பக்தனாகயிருந்த போதிலும், உன் ஸ்வபாவமான இரக்கத்தை மறைத்துக் கொண்டு, மஹாபலியைப் பாம்புகள் வஸிக்கும் நாக லோகத்தில் தள்ளியவளே! ''புவனேச்வரி'' எனப் பெயர் கொண்ட என் தாயே! போற்றி! போற்றி!

नृपकुल रुधिरजलै र्जगदविदितसीमम्
शमयसि कोपानलमति भीमम् ।
सुन्दरि ! धृतभार्गवतनो ? जयजगदम्ब ! शिवे ॥१२

ந்ருபகுல ருதிரஜலைர் — ஜகதவிதிதஸீமம்
சமயஸி கோபானலமதிபீமம் — சுந்தரித்ருத
பார்கவதனோ — ஜயஜகதம்ப சிவே ॥

அரசர் குலத்தை வேரறுத்து, அவர்களுடைய ரக்த ஜலத்தினால், எடுத்த சபதத்தை நிறைவேற்றி உலகம் காணாத எல்லையுடைய, தன்கோபத்தைத் தணித்துக் கொண்ட பரசுராம ரூபங்கொண்டவளே ''சுந்தரியே'' போற்றி! போற்றி!

हत्वा दशवदनं युधितदनयदुःस्थम्
निखिलं भुवनं जनयसि सुस्थम्
तारे ! धृतरामरूपे ! जयजगदम्ब शिवे ॥ १३ ॥

ஹத்வா தசவதனம் — யுதிததனய துஸ்த்தம்
நிகிலம்புவனம் — ஜனயஸி ஸுஸ்தம்
தாரேத்ருத ராமரூபே — ஜய ஜகதம்ப சிவே ॥

உலகனைத்தையும் துன்புறுத்திய இராவணனைக் கொன்று, அவன் கொடுமை தாங்காது தவித்த உலகை நிலை நாட்டிய "ஸ்ரீ தாரா" தேவியே! ராமரூபங் கொண்டவளே! போற்றி! போற்றி!

वहसि करांबुरुहेण हलं सितधारम्
रिपुगणदेह क्षेत्र विदारम् ।
भैरवि ! धृत हलिशरीरे ! जयजगदम्ब ! शिवे ॥ १४

வஹஸிகராம்புருஹேண
ஹலம்ஸிததாரம் — ரிபுகணதேஹ
க்ஷேத்ரவிதாரம் — பைரவித்ருத
ஹலிசரீரே — ஜய ஜகதம்ப சிவே ॥

சத்ருக்களுடைய தேஹமாகிய பூமியை உன் தாமரை மலர் போன்ற கைகளில் கலப்பையாகிய ஆயுதந்தரித்து உழுதவளே! பலராமரூபங் கொண்ட "பைரவி" என்னும் தாயே! போற்றி! போற்றி!

स्वकथित वेदमहो कथयसि विपरीतम्
त्रिजगज्जनयसि मोह परीतम् ।
महालक्ष्मि ! बुद्ध रूपे ! जयजगदम्ब ! शिवे ॥ १५

ஸ்வகதிதவேத மஹோ கதயஸி விபரீதம்
த்ரிஜகஜ்ஜனயஸி மோஹபரீதம் ।
மஹாலக்ஷ்மி புத்தரூபே—ஜய ஜகதம்ப சிவே ॥

புத்தனாக வடிவெடுத்து, உன்னாலேயே சொல்லப்பட்டதான வேதத்திற்கு, விபரீதமான அர்த்தம்செய்து, மூன்றுலகத்தையும் மயக்கியவளே! "மஹாலக்ஷ்மீ" என்னும் தேவியே! போற்றி! போற்றி!!

## புதுக்கோட்டை

# ஸ்ரீ ஜட்ஜ் ஸ்வாமிகள் அதிஷ்டானத்தில்

# உலகசாந்தியை அளிக்கும்

# ஸ்ரீ சாந்தி துர்கா மஹாயாகம்.

---

ஸ்ரீ பகவானை பெண் உருவாகக்கூறியது நமது வேத மாகும். அப்படிப்பட்ட தெய்வமாகிய ஸ்ரீ அம்பாளுக்குப் பல பெயர்கள் உண்டு. அதில் துர்கா என்ற ஓர் சிறந்த பெயரை வேதம் கூறியுள்ளது.

" दुर्गां देवीं शरणमहं प्रपद्ये सुतरसि तरसे नमः । "

(துர்காம் தேவீம் சரணமஹம்ப்ரபத்யே ஸுதரஸி தரஸே நம:)

ஓ துர்காதேவியே! தங்களைச்சரணமாக அடைகிறேன். நன்கு ஆபத்துக்களிலிருந்துத் தாண்டுவிப்பவளே! ஸகல கஷ்டங்களையும் போக்குவதற்காகத் தங்களை நமஸ்கரிக்கிறேன், "துர்கை" என்றால் துக்கத்தை போக்குகிறவள். மேலும் துர்கம் என்றால் ஆபத்துக்கள் நிரம்பிய பெரிய அகழ். அதிலிருந்து கரை ஏற்றுகிறவள் துர்கை. அப்படிப்பட்ட துர்கையின் அருள் உலகத்திற்கு எப்பொழுதும் வேண்டும்.

அதிலும் நடக்கும் கீலக வருஷம் வரப்போகும் ஸெளம்ய வருஷம், ஸாதாரண வருஷம் 1969-70-71, இந்த வருஷங்களில் சனி முதலிய கிரஹங்களின் ஸஞ்சாரங்களால் பல தீங்குகள் உலகத்தில் ஏற்படும். தற்காலம் சனி மீன ராசியில் ராகுவுடன் சேர்ந்து இருப்பதாலும் இதனுடைய வேகம் சில வருஷங்கள் உலகத்திலுள்ள மனிதர்களின் ரத்தம் பூமியில் எதிர்பாராத முறையில் ஓடும். ஜோதிஷ நூல் கூறும் வசனமாவது—

" दिनकरतनयफणीन्द्रौ सहस्थितावेकराशि मुपगम्य ।
नरशोणित प्रसिक्तां सकलां वसुधां क्षणेन कुर्वते " ॥

(தினகரதநய பணீந்த்ரௌ ஸஹஸ்திதாவேக ராசி
முபகம்ய ।
நரசோணித ப்ரஸிக்தாம் ஸகலாம் வஸுதாம் க்ஷணேந
குர்வதே ॥ )

மேலும் மேஷ ராசியில் சனி, சூர்யன், சுக்ரன், செவ்வாய் இவர்களுடன் சேர்ந்தால் துர்பிக்ஷமும் உலகத்தில் பலவிதமான பீடைகளும் உலகமெங்கும் பயத்தினுல் கலக்கமும் ஏற்படும்.

मेषे शनैश्चरो भानुः भार्गवो भूमिजस्तथा ।
दुर्भिक्षं लोकपीडा च भवेत् पृथ्वी भयाकुला ॥

(மேஷே சனைச்சரோ பாநு: பார்கவோ பூமிஜஸ்ததா ।
துர்பிக்ஷம் லோகபீடாச பவேத் ப்ருத்வீ பயாகுலா ॥ )

என்றும் 27–4–69 சனி மேஷ ராசிக்கு நீசனுக வருகிருன். அது அங்காரகனுடைய வீடு. அங்காரகன் பூமிக்கு அதிபதி. இதனுல் அயல் நாட்டார் நம் தேசத்தை ஆக்ரமிக்க முயற்சிப்பார்கள். 13—4—69ல் சூரியனும் மேஷ ராசியில் சனி வருவதற்கு முன்னமேயே வருகிருன். பின்பு சுக்ரன் செவ்வாய் முதலியவர்களும் சனியுடன் மேஷ ராசியில் சேரப்போகிருர்கள்.

மேலும் 3—11—69ல் துலா ராசியில் குரு வருவதாலும் குருவுக்கு ஏழாமிடத்தில் சனி இருப்பதாலும், உள்நாட்டுக் கலகமும் அரசர்களுக்கு ஆபத்தும் உணவுப் பொருள் கிடைக்காமல் கஷ்டங்களும் ஏற்படுமென–

यदा जीवयुतो मन्दः जीवाद्वा सप्तमे स्थितः ।
तदा प्रजा विनश्यन्ति भूपाश्चान्नपरिक्षया: ॥

(யதா ஜீவயுதோ மந்த: ஜீவாத்வா ஸப்தமேஸ்தித: ।
ததா ப்ரஜா விநச்யந்தி பூபாஶ்சான்ன பரிக்ஷயா: ॥ )

ஜோதிஷ நூல் கூறுகிறது.

இந்தச் சமயத்தில் எல்லா இடங்களிலும் ஜப ஹோமங்களை நல்ல பெரியவர்களை வைத்துக்கொண்டு செய்யவேண்டும். சேந்த மங்கலத்தில் அவதூதர்களாக விளங்கிய பரமஹம்ஸ ஸ்வயம்ப்ரகாச ஸ்வாமிகளின் பரிபூர்ண அனுக்ரஹத்துக்குப்பாத்திரர்களும் சிஷ்யர்களுமான ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகள் அவர்கள் உலக க்ஷேமார்த்தமாய் மேலே கூறிய நவக்ரஹ தோஷங்கள் விலகி ஸகலக்ஷேமங்களும் உலகத்திற்கு உண்டாவதற்காக ஸ்ரீ சாந்தி துர்கா மஹா யாகத்தை ஸௌம்ய வருஷம் வைகாசிமாதம் 14ந்தேதி செவ்வாய்க்கிழமை (27-5-69) புதுக்கோட்டையில் ஸ்ரீ ஸதாசிவப்ரம்மேந்திர ஸரஸ்வத்யவதூத ஸ்வாமிகளின் ஸமாதியில் ஸ்ரீ புவனேஶ்வரி ஸ்ரீ சக்ரபூர்ண மேரு ஸன்னிதியில் நடத்தப் போகிறார்கள். நூற்றுக்கணக்கான உபாஸகர்கள் ஆஹாரம் உட்கொள்ளாமல் உபவாஸத்துடன் இந்த மஹா மந்திரத்தை துர்கா ஸூக்தத்திலுள்ள ஓர் முக்யமான மந்திரத்தினால் ஸம்புடமாகச் செய்து (ஆதியிலும்—முடிவிலும் சேர்த்து) ஜப ஹோமங்களைச் செய்யப்போகிறார்கள்.

ஸ்ரீ ஸ்வாமிகள் அவர்கள் மஹா மந்திரங்களை ஜபித்து ஸித்தி பெற்றவர்கள், அவர்கள் ஒவ்வொரு வருஷமும் இம்மாதிரி மஹா யாகங்களைச் செய்து

வருவதால்தான் பல தீங்குகள் ஏற்படாமல் தடை பட்டு வருகின்றன.

மேலும் இந்த மஹா யாகத்தால் அரசாங்க நிர்வாகி களுக்குப் பலதுன்பங்கள் ஏற்படாமல் நீங்கிவிடும். இத ஞல் பிரஜைகளுக்கு விசாரங்கள் நீங்கி நல் வாழ்க்கை ஏற்படும். மந்திர சாஸ்திரமோவெனில் இதனுல் மூன்று உலகங்களுக்கும் ஏற்படும் தீங்குகள் நீங்குமென்றும் பயம் விலகுமென்றும்—

सर्वबाधा प्रशमनं त्रैलोक्यस्याखिलेश्वरि एव मेव त्वया-

कार्यं । अस्मद्वैरि विनाशनम् ॥

(ஸர்வ பாதா ப்ரசமனம் த்ரைலோக்ய—

ஸ்யாகிலேஶ்வரி ।

ஏவ மேவ த்வயா கார்யம் அஸ்மத்வைரி விநாசனம் ॥ )

என்று கூறியுள்ளது.

மேலும் இந்த மஹா யாகத்தால் உலகத்திற்குத் தீங்குகளை அளிக்கும் கெட்ட குறிகளாகிய வால் நக்ஷத்ரம் போன்றவைகள் மறைந்துவிடும். மிகக்கடூரமான நவக்ர ஹங்களின் பீடைகளும் விலகிவிடும். கெட்ட ஸ்வப்பனங் கள் ஏற்பட்டால் அவை நல்ல ஸ்வப்பனங்களாக மாறி விடும்.

उपसर्गाः शमं यान्ति ग्रहपीडाश्च दारुणाः ।

दुस्वप्नं च नृभिर्दृष्टं सुस्वप्नमुपजायते ॥

(உபாஸர்க்கா:-சமம்யாந்தி க்ரஹ பீடாஶ்ச தாருணு

துஸ்வப்னம்ச ந்ருபிர்த்ருஷ்டம் ஸுஸ்வப்னமுப

ஜாயதே ॥

மேலும் குழந்தைகளுக்குத் தீங்கு அளிக்கும் கெட்ட கிரஹங்கள் (பூத பிசாசுகள் நீங்கிவிடும். உள்நாட்டுக் கலகம் ஏற்பட்டால் அவைகள் நீங்கி அன்பை உண்டு பண்ணிவிடும். ஸ்ரீ துர்கா சூலினியை ஸ்தோத்ரம் செய்தாலும் புஷ்பங்களாலும் சந்தனம், தூபம் தீபம் நைவேத்யம் முதலியவற்ருலும் பூஜித்தால் நிரம்ப பொருளை அளிப்பாள். புத்ரலாபத்தையும் கொடுப்பாள். தர்மத்தில் மங்களமான புத்தியை அளிப்பாள். முடிவில் ஸத்கதியை அளிப்பாள்.

स्तुता संपूजिता पुष्पैः गन्धधूपादिभिस्तथा ।
ददाति वित्तं पुत्रांश्च मतिं धर्मे गतिं शुभाम् ॥

(ஸ்துதா ஸம்பூஜிதா புஷ்பைஃ கந்ததூபாதிபிஸ்ததா |
ததாதி வித்தம் புத்ராம்ஶ்ச மதிம்தர்மே கதிம் சுபாம் ॥ )

இந்த சாந்தி துர்கா மஹா யாகத்தில் ஆஸ்திகர்கள் யாவரும் கலந்துகொண்டு தரிசித்து பரிபூர்ணமாய் உபகரித்து (உபகாரம் செய்து) ஸ்ரீ துர்கா சூலினியின் பரிபூர்ணமான அனுக்ரஹத்தை அடையக் கோருகிறேன்.

இப்படிக்கு,
சேங்காலிபுரம் அனந்தராம தீக்ஷிதர்,
கேம்ப், பெங்களூர்-4, (20—2—69)

[மேற்கண்ட மஹா யாகத்திற்கு பொருளுதவி அளிக்க வேண்டுவோர் தங்கள் காணிக்கைகளை கீழ்க் கண்ட விலாசத்திற்கு அனுப்பக் கோருகிருேம்.

காரியதரிசி, அதிஷ்டானம்,
புதுக்கோட்டை,
திருச்சி ஜில்லா.

புதுக்கோட்டையில் ஷை யாகம் 27—5—69 செவ்வாய்க் கிழமை ஆரம்பம்.]

# கர்மவிபாகம்.



K. B. ஸுப்ரமணியசாஸ்திரிகள், (கதிராமங்கலம்)

கேள்வி—சென்ற இதழில் — சாஸ்திரோக்த பரிஹாரம் செய்வதே முறையாகும் என்று சொன்னீர்களே. ஜாதகபாவத்தில் எப்படி கிரஹ அமைப்பு இருந்தால் எந்தமாதிரி வியாதி உண்டாகும்? சரீரத்தில் தனித்தனி அவயவங்களில் ஏற்படும் வியாதியைப் போக்கடிக்க, பாப ப்ராயச்சித்தமாக எப்படி பரிஹாரம்? என்ன பாபம் செய்தால் இந்த பிறப்பில் எந்த வியாதி பீடிக்கும்?

பதில்—சொல்வதற்கு பயமாக இருக்கிறது. பாபத்தைச் செய்தால் தக்க பலனை அனுபவித்தே தீரவேண்டும். பாபமானது மனிதனை ஏழு ஜன்மாக்களில் பின்தொடர்ந்து வருகிறது. அதற்குத்தான் ஜாதகம் எழுதும்போதே.

ஜனனி ஜன்ம ஸௌக்யானும் வர்த்தனீ
குலஸம்பதாம் பதவீ பூர்வபுண்யானும்
லிக்யதே ஜன்ம பத்ரிகா—என்று எழுத ஆரம்பிக்கிறோம்

புண்ய பாபங்களை அனுபவிக்கவே இப் புவியில் பிறந்து இருக்கிறோம். புண்யசாலிகளுடைய ஜாதக அமைப்பு அவாள் இப் புவியில் ஸௌக்யாதிகளை அனுபவிக்கும்போதே நன்கு விளங்கும். பாபாத்மாக்களைப் பார்க்கும்போது இவான் முற்பிறவியில் சொல்லொணாத பாபங்களைச் செய்து இப்பிறவில் சொல்லமுடியாத துன்பங்களை (வியாதிகளை) அனுபவிக்கிறார்கள். அவர்களுக்கு பரிஹாரங்கள் வேதோக்தமாக நன்கு சொல்லப்பட்டு இருக்கிறது. அவைகளில் முக்யமாக வேதபாராயணம். பதினாயிரக்கணக்கான காயத்ரீஜபம், ஸ்வர்ணதானம். ஸ்வர்ண ப்ரதிமையில் அந்தந்த ப்ராயச்சித்தத்துக்கு சொல்லப்பட்ட ப்ரதிமைசெய்து தானம் முதலியவைகளாலும் இப் பிறவியில் அமைந்த ஜாதக ப்ரகாரம் ரோகாதிபதி—ரோகஸ்தானத்தில் நின்ற கிரஹம், ரோக ஸ்தானத்தை பார்க்கும் கிரஹம் ஷஷ்டஸ்தானத்தில் சேர்ந்த

கிரஹம் பாப க்ரஹங்களுடைய அம்சம் ஸம்மந்தம், ஷை இடங்களில் செவ்வாய்-சனி ராஹு-கேது இவாளுடை ஆதிக்கம் இவர்களால் 6-ம் பாவ ஸம்மந்தம் இவைகளை நன்கு தீர்மானித்து ஆலோசித்த பிறகும் வர்த்தமான தசாபுக்தி கோசார ரீதியாக இவைகளை தீர்மானித்த பிறகே கர்மகாண்ட ப்ராயச்சித்தாதிகள் செய்யவேண்டும்.

கே—முகத்தில் ரோகம் எப்படி ஏற்படுகிறது?

ப—தர்ம கார்யங்களை நன்கு ஆரம்பித்து மத்தியில் ஷை தர்மத்தை விட்டவரும். ஒருவர் ஒரு தோஷமும் செய்யாமல் இருக்கும்போது அவர்-அப்படிச் செய்தார். பாபம் பண்ணினார். அது தப்பு-அவா ஸமூகத்திற்கு உகந்தவர் அல்ல என்று தப்பு ப்ரசாரம் செய்யும் மனிதர்கள் நாய், பூனை இவைகளை மடிமேல் வைத்துக்கொண்டு போஜனம் செய்பவர்கள், வேறு ஒருவர் மேல் ரஹஸ்யமாக குற்றம் சொல்பவர்கள், தன்வீட்டு ஆசார்யாளை தூஷித்தவர்கள், வித்யா உபதேசம் செய்யும் குருவை தூஷித்தவர்கள், இவர்களுக்கு முகத்தில் எப்போதும் துர்காற்றமும், ரத்தம், சீழ் வடிதலும் முக விகாரமும் உண்டாகும்.

கே—இவர்களுக்கு என்ன பரிஹாரம்?

ப—இவர்கள் நன்கு கர்மவிபாகத்தில் சொல்லப்பட்ட ப்ரகாரம் கிருச்சரம்-அதிகிருச்சரம் காயத்ரீஜபம்- கூச்மாண்ட ஹோமம் (ஸுகந்த) வாஸனை வஸ்துக்களுடைய தானம்-ஹிரண்யம்-தான்யம் இவைகளுடைய தானம் இவைகளைச் செய்து போஜனம் செய்து வைக்க ஷை வியாதி தீரும்.

கே—இவர்களுக்கு ஜாதகரீதியாக எப்படி கிரஹ அமைப்புகள் இருக்கும்?

ப—இரண்டுக்கு உடையவன் 6, 8, 12 ஸ்தானங்களில் துர்பலனாக இருக்க, 6-ம் வீட்டு அதிபனும்-சுக்ரனும் செவ்வாயும் இரண்டில் இருந்தாலும், 2-ம் இடத்தவன் சனி செவ்வாயின் அம்சத்தில் இருந்தாலும், சனியும் இரண்டுக்குடையவனும்

சேர்ந்து ரோகஸ்தானமான 6-ம் வீட்டில் இருந்தாலும் இவ்வாறான ஜாதகங்களுக்கு முகத்தில் ரோகம் (வியாதி) உண்டாகி பீடிக்கப்படுவர்.

கே—நாக்கில்-ரோகம் எந்த பாபம் செய்தால் வரும்?

ப—ரஸவத்தான பதார்த்தங்களை திருடி சாப்பிடுவதாலும், ஸாதுக்களை நிந்திப்பதாலும் எப்போதும் பொய்பேசுவதாலும் ஒருவருக்கு ஓர் தானம் செய்வதாக சொல்லிவிட்டு செய்யாமல் இருந்தாலும் துக்கம் வரும்படி கஷ்டமான வார்த்தைகள் பேசுவதாலும் அடிக்கடி வாதாடுவதாலும் நாக்கில் ரோகவானாக ஆவான்.

கே—இவர்களுக்கு என்ன ப்ராயச்சித்தம்?

ப—நன்கு சுத்தனாய்-காயத்ரீ மஹாமந்திரத்தை லக்ஷம் ஆவர்த்தி ஜபம் செய்து (தசாம்சமான) பத்தில் ஓர் பாகம் பதினாயிரம் ஆவர்த்தி காயத்ரியால் திலஹோமம் செய்து நெல், கோதுமை, பயறு இந்த தான்யங்களை சக்தியானுஸாரம் தானம்செய்து பிறகு ஆயுர்வேத ப்ரோக்தமாக ஔடதமும் சாப்பிட ரோகம் தீரும்.

---

# நவக்ரஹங்களில் சனைச்சரன்.

## சனைச்சரன் வரலாறு.

இவர் ஏழாவது கிரஹம். இவர் பெயரால் சனிக் கிழமை உண்டானது. ஸூர்யனது புத்ரர் இவர். இவருடைய தாயார் பெயர் சாயாதேவி. பல புராணங்களிலும் இவரது சரிதம் வர்ணிக்கப் படுகிறது. ஸூர்யன் த்வஷ்டா என்பவரது பெண்ணான ஸம்க்ஞா அல்லது ஸுவர்ச்சலா என்பவளை மணந்தார். மநு, யமன், யமுநா என்ற மூன்று குழந்தைகள் உண்டாயினர். தான் இளைத்ததாலும் ஸூர்யனது தேஜோ மண்டலம் அதிகமாக இருப்பதாலும் அவருடன் இருப்பது சிறிது கஷ்டமாக இருந்தது அவர் மனைவிக்கு. ஆதலால் அவர் தனது நிழலைப் பார்த்து ஒரு பெண்ணாக வரும்படி அழைத்தார். அது ஜீவக்களையுடன் வந்து என்னை ஏன் படைத்தாய்? எனக்கு என்ன பெயர்? என்று கேட்டது.

நிழலிலிருந்து உண்டானதால் சாயாதேவி என்று பெயர் உனக்கு. நான் வரும் வரை என் கணவனிடம் என்னைப் போலவே இரு. என் மூன்று குழந்தைகளையும் காப்பாற்று. நீ யார் என்று ஒருஸமயம் அவர் கேட்டால் ஸம்க்ஞா தேவி என்றே சொல். நீயும் அவரிடம் குழந்தைகளைப் பெற்றுக்கொள். சிறிது காலம் சென்றபின் நான் வருகிறேன் என்றுகூறி ஸம்க்ஞாதேவி தன் பிறந்த வீடு சென்றாள். த்வஷ்டா தன் பெண்ணை வரவேற்றார். ஆனாலும் கணவனை விட்டு நீ மட்டும் வந்தது தர்மமில்லை. நீ அவரிடம் சென்று அவரையும் அழைத்துவா என்றார். இதைக் கேட்ட ஸம்க்ஞா இப்பொழுது அங்கு செல்வது பலவகையிலும் தீது என்று எண்ணி குதிரை வடிவம் எடுத்து குரு க்ஷேத்ரம் சென்று தவம் செய்தாள்.

சாயாதேவி ஸாவர்ணி மநு, ஶனைஶ்சரன் என்ற இரு புத்ரர்களைப் பெற்ருள். மூத்தாள் புத்ரர்களை ஒரு மாதிரியும், தன் புத்ரர்களை அதிக ஆதரவுடனும் காப்பாற்றி வந்தாள். இதைக்கண்ட யமன் கோபங்கொண்டு எல்லோரையும் ஸமமாக நடத்தும்படி எச்சரித்தார். அவள் முன்போலவே பக்ஷபாதமாக நடப்பதைக்கண்டு, தந்தையிடம் முறையிட்டார். அவர் சாயையை மிரட்டி நீ யார் என்று கேட்டார். அவள் நடந்தவற்றைக் கூறி இருவரையும் ஸமாதானம் செய்துவிட்டு ஸம்க்ஞையைத் தேடி அவள் பிறந்த வீட்டிற்குச் சென்ருர். த்வஷ்டா முன் நடந்தவற்றைக்கூறி ஸூர்யனது தேஜோ மண்டலத்தில் அதிகமாயும் உக்ரமாயும் உள்ள அம்சங்களை அப்புறப் படுத்தி அவரைக் கடைசல் பிடித்தார். அந்த தாதுக்களி லிருந்து தேவர்களுக்கு திவ்ய அஸ்த்ரங்களைச் செய்து கொடுத்தார்.

ஸூர்யன் குருக்ஷேத்ரம் சென்று ஆண் குதிரை உரு வெடுத்து பெண்குதிரையான ஸம்க்ஞா தேவியிடம் ஸங்கம் செய்தார். அவள் அது அன்யக் குதிரை என் றும் அதன் மூலமாக ஒரு குழந்தையை பெற்றுத் தன் குலத்தைக் கெடுக்கக்கூடாது என்றும் எண்ணி அந்த வீர் யத்தைக் கர்ப்பப்பைக்குள் செல்லாமல் தனது மூக்கு வழியாக வெளிப்படுத்தினுள். அதிலிருந்து அச்விநீ தேவர் தோன்றினர். ஸூர்யன் ஸம்க்ஞாதேவி, சாயா தேவி ஆறு புத்ரர் ஆகியவர்களுடன் தன்னிருப்பிடம் சென்று வாழ்ந்திருந்தார்.

ஶனைஶ்சரனது பார்வை மிக க்ரூரமானது. ஆதலால் அவர் தாய் அவரை எங்கும் வெளியில் அனுப்புவது இல்லை. பார்வதிதேவி கிருஷ்ணனை ஆராதித்து நரமுக கணபதியைப் பெற்ருள். இந்த ஆச்சரியத்தைக் காண அமரர் அனைவரும் கைலாசம் சென்ருர்கள். ஶனைஶ்சர னும் கைலாஸம் செல்லத் தாயை உத்திரவு கேட்டார்.

உனது கண் பொல்லாதது. நீ போகவேண்டாம் என்றாள் தாய். நான் அவரைக்கண்ணால் பார்க்கவில்லை. அங்கு போக உத்திரவு கொடு என்றார். தாயும் உத்தரவளிக்க சனி தலை குனிந்தபடியே அங்கு சென்றார். "பார்வதி நிமிர்ந்து பார். ஸர்வ வல்லமையுள்ள என் குழந்தைக்கு ஒரு ஆபத்தும் வராது" என்றாள்.

சனி நிமிர்ந்து நரமுக கணபதியைப் பார்த்தார். அவரது தலை அறுந்து ஆகாயத்தில் கண்ணுக்கெட்டாத தூரம் சென்று மறைந்தது. தேவி பரம துக்கங்கொண்டு கதறினாள். பரமசிவன் உத்திரவுப்படி பைரவர் வடக்குத் திக்கில் தலைவைத்துப் படுத்திருந்த யானையின் சிரத்தை அறுத்து கணபதியின் உடலில் வைத்தார். அவர் கஜமுக கணபதி ஆனார். தேவி கோபங்கொண்டு ஶனியைப் பங்குகால் ஆகும்படிச் சபித்தாள். அது முதற் கொண்டு அவர் ஶனைஶ்சரன்—மெதுவாகச் செல்பவர்— என்ற காரணப்பெயரைப் பெற்றார். இதைக் கேட்ட சாயாதேவி கஜமுகனை லம்போதரனாக (தொங்கும் வயிறு உள்ளவனாக சபித்தார்.) ப்ரும்ம வைவர்த்த புராணம்.

தாயின் உத்திரவு பெற்று காஶீ க்ஷேத்திரம் சென்று தன் பெயரால் ஶனைஶ்சர லிங்கம் ப்ரதிஷ்டை செய்து ஶிவனை ஆராதித்தார். அவரருளால் க்ரஹங்களில் ஒருவரானார். அவரிடம்தனியான ஒரு தேசம். அதற்குத் தலைவரிவர் என காஶீ காண்டம் கூறுகிறது.

அயோத்தியைத் தசரத சக்ரவர்த்தி ஆண்டு வரும் பொழுது நீண்டநாள் மழையில்லை. மாதமும்மாரி பெய்யும் ஊரிலே பல ஆண்டுகளாக மழைபொழியாத காரணம் யாதென தசரதர் தனது குலகுருவான வஸிஷ்டரைக் கேட்டார்.

வஸிஷ்டர் க்ஞானக் கண்ணால் பார்த்து, ஶனைஶ்சர யோகத்தால் மழை பொழியவில்லை. ஶனைஶ்சரனை இந்த ஸ்துதிகளால் ஸ்தோத்ரம்செய் அவர் ஸந்தோஷமடைந்து மழையை உண்டு பண்ணுவார் என்றார். அரசன்

அங்கனமே பக்தியுடன் பலநாள் துதித்தும் மழை உண்டாகவில்லை. அவரும் ஒரு தேச அரசன். ஸாம தாந பேதங்களால் அவர் வசமாகவில்லை. இனி தண்டத்தினுல் தான் அவரை வசமாக்க வேண்டும். அதற்கு உத்திரவு அளித்து என் தேர் ஶனி மண்டலம் வரை போகும்படி ஆஶீர்வாதம் செய்யுங்கள் என்ருர் அரசன். குருவும் அப்படியே ஆசீர்வதித்தார்.

தசரதனது தேர் ஆகாசமார்க்கமாகக் கிளம்பி ஶனி க்ரஹ மண்டலம் சென்றது. தசரதன் வருவதை அறிந்த ஶனி ஊரைவிட்டுக் கிளம்பி வேறிடம் சென்ருர். அரசன் அங்கும் சென்ருர். இங்ஙனம் பத்து திக்குகளுக்கும் சென்ருர் அரசனும் சென்ருன். என் கண்ணுல் பார்த்தால் நீ அழிந்து விடுவாய், ஜாக்கிரதை, செல் என்ருர் ஶனி. உமது பார்வையால் நான் அழிந்தாலும் எனது ராஜ்யத்தில் மழை உண்டானுல் போதும் என்ருர் தசரதன். ஶனைஶ்சரன் உக்ரமான பார்வையால் மன்னனைப் பார்த்தார். அவருக்கு யாதொரு தீங்கும் உண்டாகவில்லை. இதைக் கண்டு ஆச்சர்யம் அடைந்தார் ஶனி, தசரதனை ஸமாதானப்படுத்தி பத்து திக்குகளிலும் என்னைத் துரத்திக்கொண்டு உனது தேர் பின் வந்ததால் உனக்குத் தசரதன் என்று காரணப்பெயர் உண்டாகும். எனது ஸ்துதியைப் பாராயணம் செய்தால் இனி மழை பொழியும் என்ருர். அங்ஙனமே மழை பொழிந்தது என மஹாஸ்காந்தம் கூறுகிறது.

ஶனைஶ்சர க்ரஹ வரலாறு முற்றிற்று.

---

ஸ்ரீ ஶனைஶ்சர மஹாமந்த்ரஸ்ய ஸிந்து த்வீப ரிஷி: காயத்ரீ சந்த: ஶனைஶ்சரோ தேவதா ॥

शन्नो देवी रभिष्टय आपो भवन्तु पीतये ।
शंयो रभिस्रवन्तुनः ॥

ஶன்னோ தேவீ ரபிஷ்டய ஆபோ பவந்து பீதயே ।
ஶம்யோ ரபிஸ்ரவந்து ந:

## அதிதேவதா மந்த்ரம்.

इमं यम प्रस्तर माहि सीदांगिरोभिः पितृभिः संविदानः ।
आत्वा मन्त्राः कविशस्ता वहन्त्वेनाराजन् हविषामादयस्व ॥

இமம் யம ப்ரஸ்தர மாஹி ஸீதாங்கி ரோபி: பித்ருபி: ஸம்விதாந: — ஆத்வா மந்த்ரா கவிஶ ஸ்தா வஹந்த் வேநா ராஜன் ஹவிஷா மாதயஸ்வ ॥

## ப்ரத்யதி தேவதா மந்த்ரம்.

प्रजापते नत्वदेतान्यन्यो विश्वा जातानि परिता बभूव ।
यत्कामास्ते जुहुमस्तन्नो अस्तु वयँस्याम पतयो रयीणाम् ॥

ப்ரஜாபதே நத்வ தேதான் யன்யோ விஶ்வா ஜாதாநி பரிதா பபூவ — யத்காமாஸ்தே ஜுஹும: தன்னோ அஸ்துவயக்கு ஸ்யாமபதயோ ரயீணும்.

1 ஶனைஶ்சர மந்த்ரார்த்தம் — வாயுவின் மூலமாக மேகத்தையும் மேகத்தின் மூலமாக மழையையும் உண்டு பண்ணுபவரான ஓ ஶனைஶ்சரனே! எங்களுக்கு சுத்தமான ஜலத்தைத்தாரும், எங்களது இஷ்டம் பூர்த்தியாகும்படி செய்யும். ஸுகத்தைத்தாரும். உமது அருளால் ஜலம் எங்கும் பெருகட்டும்.

2 ஶனைஶ்சரனின் ஸஹோதரரான யமதர்மராஜன் இவருக்கு அதிதேவதை. அவரது மந்த்ரத்தின் பொருள்: ஓ யமனே! ஆங்கிரஸ என்ற பித்ருக்களுடன் இங்கு வாரும். நாங்கள் கூறும் மந்த்ரம் உம்மிடம் வந்து அழைத்து வரட்டும். பித்ருக்களுக்குத் தலைவரான நீர் நாமளிக்கும் ஹவிஸ்ஸால் ஸந்தோஷம் அடைந்து எங்களையும் ஸந்தோஷப் படுத்தும்.

3 ஶனைஶ்சரனுக்கு ப்ரயத்யதி தேவதையான ப்ரஜாபதியின் மந்த்ர அர்த்தம். ஓ ப்ரஜாபதே! நீரே இவ்வுலகைப் படைத்துபரிபாலித்து லயப்படுத்திக்கொள் கிறீர். எந்த ஆசையுடன் உம்மை வணங்குகிறோமோ அதைப்பூர்த்தி செய்கிறீர். உமது அருளால் நாங்கள் செல்வம் உள்ளவர்களாக இருக்கவேண்டும்.

ஶனைஶ்சரரின் மந்த்ரார்த்தம் முற்றிற்று.

---

## சனைச்சர கவசம்.

ஓம் அஸ்ய ஸ்ரீ ஶனைஶ்சர கவச மஹாமந்த்ரஸ்ய காஶ்யபரிஷி: அநுஷ்டுப் சந்த: ஶனைஶ்சரோ தேவதா.

ஶம் பீஜம் நம்-ஶக்தி: மம்-கீலகம் மம ஶனைஶ்சர ப்ர ஸாத ஸித்யர்த்தே ஜபே விநியோக:

## கரன்யாஸம்.

ஶாம் — அங்குஷ்டாப்யாம் நம:
ஶீம் — தர்ஜநீப்யாம் நம:
ஶூம் — மத்யமாப்யாம் நம:
ஶைம் — அநாமிகாப்யாம் நம:
ஶௌம் — கநிஷ்டிகாப்யாம் நம:
ஶ: — கரதல கரப்ருஷ்டாப்யாம் நம:

## அங்கன்யாஸம்.

ஶாம் — ஹ்ருதாய நம:
ஶீம் — ஶிரஸே ஸ்வாஹா
ஶூம் — ஶிகாயை வஷட்
ஶைம் — கவசாய ஹும்
ஶௌம் — நேத்ரத்ரயாய வௌஷட்
ஶ: — அஸ்த்ராய பட்

பூர்ப்புவஸ்ஸுவரோமிதி திக் பந்த:

## த்யானம்.

சதுர்புஜம் ஶநிம் தேவம்—சாப தூணீக்ருபாணகம் ।
வரதம் பீமதம்ஷ்ட்ரஞ்ச—நீலாங்கம் வரபூஷணம் ॥
நீல மால்யா நுலேபஞ்ச—நீலரத்நை: அலங்க்ருதம் ।
ஜ்வாலோர்த்வ மகுடாபாஸம்-நீலக்ருத்ர ரதான்விதம் ॥
மேரும் ப்ரதக்ஷிணம் க்ருத்வா-ஸர்வலோக பயாவஹம் ।
க்ருஷ்ணம் பரதரம் தேவம்-த்விபுஜம் க்ருத்ர ஸம்ஸ்திதம்
ஸர்வ பீடாஹரம் ந்ரூணாம்-த்யாயேத்க்ருஹகணோத்தமம்

*தியான ஶ்லோக அர்த்தம்:-* நான்கு கைகள் உள்ளவர். வில் அம்புப்பெட்டி கத்தி இவைகளைத் தரித்திருப்பவர். வரமளிப்பவர். பயங்கரமான கோரைப்பல் உள்ளவர். கறுத்த உடல் உள்ளவர். அழகிய ஆபரணம் உள்ளவர். கறுப்பான புஷ்பமும் சந்தனமும் அணிந்தவர். கறுப்பு ரத்நங்களால் அலங்கரிக்கப் பட்டவர். ஜ்வாலையை மேலே கக்கும் கிரீட ரத்நங்களால் ப்ரகாசிப்பவர். மேருவை ப்ரதக்ஷிணம் செய்பவர். எல்லோருக்கும் பயங்கரமாக இருப்பவர். கறுப்பு வஸ்த்ரம் அணிந்தவர். சிலசமயம் இருகைகளுடன் கழுகுமீது அமர்ந்திருப்பவர். ஸர்வ பீடைகளையும் போக்குபவர். இத்தகைய க்ருஹ கணங்களில் உத்தமரான ஶநியை த்யாநம் செய்கிறேன்.

லம் — ப்ருதிவ்யாத்மநே கந்தான் தாரயாமி
அம் — ஆகாஶாத்மநே புஷ்பாணி ஸமர்ப்பயாமி
யம் — வாய்வாத்மநே தூபம் ஆக்ராபயாமி
ரம் — வன்யாத்மநே தீபம் தர்ஶயாமி
வம் — அம்ருதாத்மநே அம்ருதம் நிவேதயாமி
ஸம் — ஸர்வாத்மனே ஸர்வ உபசாரான் ஸமர்ப்பயாமி.

ஶநைஶ்சர: ஶிரோரக்ஷேத்-முகம் பக்தார்த்தி நாஶந: ।
கர்ணௌ க்ருஷ்ணம்பர: பாது-நேத்ரே ஸர்வ பயங்கர: ॥

கிருஷ்ணுங்கோ் நாஸிகாம் ரக்ஷேத்-கர்ணம் மே ஶஶி
கண்டிஜ: ।
புஜௌமேத்விஜே: பாது-ஹஸ்தௌ நீலோத்பலப்ரப: ॥
பாதுமேஹ்ருதயம் கிருஷ்ண: குக்ஷிம் ஶுஷ்கோதர: ததா
கடிம்மே விகட: பாது-ஊரூமே கோரரூபவான்
ஜாநுநீ பாதுமே தீர்க்க:-ஜங்கேமே அமங்கலப்ரத: ॥
குல்பௌ குணாகர: பாது – பாதௌமே பங்குபாதக: ।
ஸர்வாணி ச மமாங்காநி – பாது பாஸ்கரநந்தந: ॥
ய இதம் கவசம் நித்யம் - ஸர்வ பீடாஹரம் ந்ருணாம் ।
படதி ஶ்ரத்தயாயுக்த:-ஸர்வான்காமான் அவாப்நுயாத் ॥

கவச மந்த்ர அர்த்தம்:— அந்தந்தப் பெயர் வாய்ந்த ஶனைஶ்சரன் தலை முதல் ஸர்வ அவயவங்களையும் ரக்ஷிக்கட்டும். இந்தக் கவச மந்த்ரத்தை நித்யம் படித்தவருக்கு ஸகல இஷ்டமும் பூர்த்தியாகும்.

கவச பாராயணம் ஆனபின் முன்போல கரன்யாஸ அங்கன்யாஸாதிகளைச் செய்யவேண்டும். பூர்ப்புவஸ்ஸுவரோமிதி திக்விமோக:

ஶனைஶ்சர கவசம் முற்றிற்று.

## சனைச்சர ஸ்தோத்ரம்.

ஓம் அஸ்யஸ்ரீ ஶனைஶ்சர ஸ்தோத்ர மஹாமந்த்ரஸ்ய காஶ்யப ரிஷி: அநுஷ்டுப் சந்த: மந்தகதி: ஸௌரி: தேவதா ॥

ஶம் பீஜம் நம் ஶக்தி: மம் கீலகம்
மம ஸகல பீடாபரிஹார்த்தே ஜபே விநியோக:

### கரன்யாஸம்.

ஶனைஶ்சராய — அங்குஷ்டாப்யாம் நம:
மந்தகதயே — தர்ஜநீப்யாம் நம:
அதோக்ஷஜாய — மத்யமாப்யாம் நம:
ஸூர்ய புத்ராய — அநாமிகாப்யாம் நம:

ஶுஷ்கோதராய — கநிஷ்டிகாப்யாம் நம:
சாயாபுத்ராய — கரதலகரப்ருஷ்டாப்யாம்நம:

## அங்கன்யாஸம்.

ஶனேஶ்சராய — ஹ்ருதயாய நம:
மந்த கதயே — ஶிரஸே ஸ்வாஹா
அதோக்ஷ ஜாய — ஶிகாயை வஷட்
ஸூர்ய புத்ராய — கவசாய ஹூம்
ஶுஷ்கோதராய — நேத்ர த்ரயாய வௌஷட்
சாயா புத்ராய — அஸ்த்ராய பட்
பூர்ப்புவஸ்ஸுவரோமிதி திக் பந்த:

## த்யானம்.

ஶனேஶ்சராய ஶாந்தாய-ஸர்வ அபீஷ்டப்ரதாயினே ।
நம: ஸர்வாத்மநே துப்யம்-நமோ நீலாம்பராயச ॥

த்வாதச அஷ்டம் ஜன்மர்க்ஷே- த்விதி ஸ்தாந ஏவச ।
த்வத் ஸஞ்சாரோத்பவா தோஷா: ஸர்வே நஶ்யந்து
மேப்ரபோ ॥

நமோர்க்க புத்ராய ஶனேஶ்சராய — தமால
நீலாஞ்ஜந மேசகாய ।
ஶ்ருத்வா ஸ்துதிம்மே பலகாமதஸ்த்வம் பல்ப்ர
தோமே பவ ஸூர்ய புத்ர ।
லம் ப்ருதிவ்யாத்மனே என்ற பஞ்ச பூஜை செய்க.

## ஸ்தோத்ரம்.

1 நம: கிருஷ்ணய நீலாய — ஶிதிகண்ட நிபாயச
நமோ நீல மயூகாய — நீலோத்பல — நிபாயச ॥
2 நமோ நிர்மாம்ஸ தேஹாய—தீர்க் ஶ்ருதிஜடாயச ।
நமோ விசால நேத்ராய—ஶுஷ்கோதர பயாநக ॥
3 நம: பௌருஷ காத்ராய-ஸ்தூலரோம்ணே ஸதே நம:
நமோ நித்யம் க்ஷுதார்தாய-நித்யத்ருப்தாயதே நம:

4 நமோ கோராய ரௌத்ராய—பீஷண்ய கராளிகே |
நமோ தீர்காய ஶுஷ்காய-காலதம்ஷ்டா நமோஸ்துதே

5 நமஸ்தே கோரரூபாய – துர்நிரீக்ஷ்யாயதே நம: |
நமஸ்தே ஸர்வ பக்ஷாய – வலீமுக நமோஸ்துதே ||

6 ஸூர்ய புத்ர நமஸ்தேஸ்து-பாஸ்கரே அபயதாயிநே |
அதோ த்ருஷ்டே நமஸ்தேஸ்து-ஸம்வர்தக
நமோஸ்துதே ||

7 நமோ மந்தகதே துப்யம்-நிஷ்ப்ரபாய நமோ நம: |
தபநாத் ஜாததேஹாய-நித்ய யோக தரதாயச ||

8 க்ஞாந சக்ஷுர் நமஸ்தேஸ்து-காஶ்யபாத்மஜ ஸூநவே
துஷ்டோததாஸி ராஜ்யத்வம்-க்ருத்த: ஹரஸிதத்க்ஷணாத்

9 தேவாஸுர மநுஷ்யாஶ்ச-ஸித்தவித்யாதர உரகா: |
த்வயா அவலோகிதா: ஸர்வே-தைன்யம்
ஆஶுவ்ரஜந்திதே ||

10 ப்ரம்மா ஶக்ரோ யமஶ்சைவ-முநய: ஸப்ததாரகா: |
ராஜ்ய ப்ரஷ்டா: பதந்தீஹ-தவ த்ருஷ்ட்யா
அவலோகிதா: ||

11 த்வயா அவலோகிதாஸ்தேபி-நாஶம் யாந்தி ஸமூலத:
ப்ரஸாதம் குருமே ஸௌரே-ப்ரணத்யாஹித்வம்
அர்தித: |

12 ஏவம் ஸ்துத: ஸதா ஸௌரி:-க்ரஹராஜோமஹாபல:
அப்ரவீச்ச ஶநிர் வாக்யம்-ஹ்ருஷ்டரோமாஸபாஸ்கரி:

13 ப்ரீதோஸ்மி தவ ராஜேந்த்ர-ஸ்தோத்ரேண அநேந
ஸம்ப்ரதி |
அதேயம் வாவரம் துப்யம்-ப்ரீதோஹம் ப்ரததாமிச ||

14 த்வயா க்ருதந்து யத்ஸ்தோத்ரம்-ய: படேத் இஹமாநவ
ஏகவாரம் த்விவாரம்வா-பீடாம்முஞ்சாமி தஸ்யவை ||

15 ம்ருத்யு ஸ்தாந கதோவாபி-ஜன்மஸ்தாந கதோபிவா |
ய: புமான் ஶ்ரத்தயா யுக்த:-ஶுசி: ஸ்நாத்வா ஸமாஹித:

16 ஶமீபத்ரை: ஸமப்யர்ச்ய-ப்ரதிமாம்லோஹஜாம் மம
மாஷோதநம் திலைர் மிஶ்ரம்-தத்யாத்லோஹந்துதக்ஷிணாம்

17 கிருஷ்ணும் காம் மஹிஷீம் வஸ்த்ரம் — மாம் உத்
திஸ்ய த்விஜாதயே ॥
மத்திரேது விஸேஷேண–ஸ்தோத்ரேண அநேந பூஜயேத்
18 பூஜயித்வா ஜபேத் ஸ்தோத்ரம்—பூத்வா சைவ
க்ருதாஞ்ஜலி: ।
தஸ்ய பீடாம் நசைவஹம்–கரிஷ்யாமி கதாசந ॥
19 கோசரே ஜன்மலக்னேச-தஸாஸு அந்தர்தஸாஸுச ।
ரக்ஷாமி ஸததம் தம்ஹி–பீடாப்ய: அன்ய க்ரஹஸ்யச
20 அநேநைவ ப்ரகாரேண–பீடாமுக்தம் ஜகத் பவேத் ।
வரத்வயந்து ஸம்ப்ராப்ய–ராஜா தஸரத. ததா ॥
21 மேநே க்ருதார்த்தம் ஆத்மாநம்–ஸம்யக் ஸ்துத்வா
ஸனேஸ்சரம் ।
கோண: ஸனேஸ்சரோ மந்த: சாயாஹ்ருதய நந்தந: ॥
22 மார்தாண்டஜ: ததாஸெளரி: பாதங்கிர் க்ருத்ரவாஹந:
ப்ரும்மண்ய: க்ரூரகர்மாச–நீலவஸ்த்ர: அஞ்ஜநாத்யுதி:
23 கிருஷ்ண: தர்மாநுஜ: ஸாந்த: ஸுஷ்கோதாவரப்ரத:
ஷோடச ஏதாநி நாமாநி–ய: படேச்ச திநே திநே ॥
24 விஷமஸ்தோபி பகவான்–ஸுப்ரீத: தஸ்ய ஜாயதே ।
மந்தவாரே ஸுசிஸ்நாத்வா-மிதாஹாரோ ஜிதேந்த்ரிய:
25 தத்வர்ண குஸுமை: ஸம்யக்-ஸர்வாங்கம் த்விஜ ஸத்தம:
பூஜித்வா அந்ந பாநாத்யை:—ஸ்தோத்ரம் ய:
ப்ரயத: படேத் ॥
26 புத்ர காமோ லபேத்புத்ரம்-தநகாமோ லபேத்தநம் ।
ராஜ்யகாமோ லபேத் ராஜ்யம்-ஜயார்த்தீவிஜயீபவேத்
27 ஆயுஷ்காமோ லபேதாயு:–ஸ்ரீகாம: ஸ்ரியம் ஆப்நுயாத்
யத்யத் இச்சதி தத்ஸர்வம்-பகவான் பக்த வத்ஸல: ॥
28 சிந்திதாநிச கர்மாணி–தததிச நஸம்ஸய: ।
ஸநிநா அத அப்யநுக்ஞாத:—ஸ்வஸ்தாநம்
அகமன் ந்ருப: ॥
29 ஸ்வஸ்தாந ஸங்கதோ பூத்வா—ப்ராப்தகாம:
அபவத்ததா.

ஸனேஸ்சர ஸ்தோத்ரம் ஸம்பூர்ணம்.

# ஸ்ரீசனைச்சர க்ரஹ ஜ்யோதிஷ விசேஷம்



ஶனைஶ்சர க்ரஹம் ஸூர்யனுக்கும் சாயாதேவிக்கும் புத்ரர். இமயமலைக்கும் கயா நதிக்கும் இடையில் இருப்பவர். ஸௌராஷ்டிர தேச அதிபதி. நான்காம் வர்ணத்தவர். காஶ்யப கோத்ரம். மேற்குமுகமாக அமர்ந்தவர். வில்வடிவமான மண்டலத்தில் இருப்பவர். எள்ளே இவருக்கு ப்ரியமான தான்யம். கருவக்குவளை புஷ்பத்திலும், கருங்காலி தூபத்திலும் ப்ரியமுள்ளவர். வந்நி ஸமித் நீலரத்நம் இரும்பு தாது இவைகளில் ப்ரியமானவர். நபும்ஸக க்ரஹம்.

நீல கறுப்பு வர்ணம் அன்ய பாஷையில் அன்புடையவர். க்ரூரமானவர். தாமத குணம் உள்ளவர். கீழ்ப் பார்வை, உஷ்ணமானதையும், சீதளமானதையும் கலந்து உண்பவர். கசப்பில் ப்ரியமுள்ளவர். காக்கை இவருக்கு வாஹனம். சில சமயம் கழுகிலும் ஏறுவார். உபயக்ரஹம். ஶனிக்கு புதன், சுக்ரன், ராகு, கேது இவர்கள் மித்ரர்.

ஸூர்யன் சந்திரன், செவ்வாய் இவர்கள் ஶனிக்கு சத்ருக்கள். குரு ஸமமானவர். ஶனி, ஸூர்யனுடன் கூடினால் பலஹீனர் ஆவர். இவர் பிற்காலத்தில் பலனை அளிப்பவர். பூர்ணமான அஶுப க்ரஹம் சனி. இரவு காலத்தில் இவருக்கு பலம் அதிகம்.

ஒரு ராசியில் $2\frac{1}{2}$ வருஷம் ஸஞ்சரிப்பவர். மூன்றும் இடம் பத்தாம் இடங்களைப் பார்ப்பவர். நமது உடலில் முழங்கால் பாகத்திற்கு அவர் அதிகாரி, லக்னத்திற்கு எட்டும், பன்னிரண்டாம் இடமும் சனிக்கு மறைவு ஸ்தாநம், ஶனி தசை பத்தொன்பது வர்ஷகாலமாகும். மேஷ ராசியில் இவர் நீசமானவர். துலாராசியில் உச்சமானவர். மகரம் கும்பம் என்ற இரண்டு ராசிகளும் இவருக்கு ஸ்வக்ஷேத்ரமாகும். இவர் குறுக்குப்பார்வை உள்ளவர்.

1 இவர் முதல் இடமாகிய லக்னத்திலிருந்தால் சோம்பல், மறதி, தூக்கம், காமம், அடிக்கடி வ்யாதி முதலியவைகளை உண்டுபண்ணுவார்.

2 இரண்டாமிடத்தில் இருந்தால் முகத்தில் ரோகம் பின் யோஜனை, பொய் சொல்வது, ஸஞ்சாரம், வஞ்சனை முதலியன உண்டாகும்.

3 மூன்றும் இடத்தில் இருந்தால் கம்பீரமாகயிருத்தல் யஶஸ். ஆயுஸ் விருத்தி, பத்நீ ஸுகம், செல்வம் இவைகளைத் தருவார்.

4 நாலாமிடத்தில் துக்கம், தாய்க்கு அதிர்ஷ்டம், வீடு, பூமி, வாஹனம் இவைகளில்லாமை, இளமையிலேயே ரோகம், ஞானம், தீர்த்தயாத்ரை இவைகளை உண்டுபண்ணுவார்.

5 ஐந்தாமிடத்திற்கு புத்தியில்லாமை, மனக்கஷ்டம், அல்ப சந்தோஷம், சஞ்சலமான புத்தி, கெட்ட புத்தி இவைகளைத் தருவார்.

6 ஆறும் இடத்தில் இருந்தால் தநம், ஶத்ரு ஜயம், தைர்யம், பலபோகம் ஆகியவைகள் உண்டாகும்.

7 ஏழாமிடத்தில் இருந்தால் அழகில்லாத மனைவி கிடைப்பாள். ஏழையாவான், யாத்ரை கிளம்புவான். விசாரம் ஏற்படும். ஸ்திரீயால் துன்பம் ஏற்படும். வாயு தேகம் வஞ்சனை புத்தி உண்டாகும்.

8 எட்டாம் இடத்தில் இருந்தால் கஷ்டம். வாய்ச் சண்டை நோயால் பீடை நீண்ட ஆயுள் முதலியன உண்டாகும்.

9 ஒன்பதாம் இடத்தில் இருந்தால் தந்தைக்குத் துன்பமுண்டாகும். தர்மம் செய்ய மநம் வராது. அயோக்யனுவான். அற்பத்தனம் புத்ரக்லேஶம். இஷ்டமானவரிடம் த்வேஷம் முதலியன தோன்றும்.

10 பத்தாம் இடத்திற்கு ப்ரபுத்தன்மை சூரனுக இருத்தல், க்யாதி ஞாநம் மந்த்ரி பதவி முதலியவைகளை உண்டு பண்ணுவார்.

11 பதினென்ருவது இடத்தில் இருந்தால் ஆயுஸ் வளரும். பலபோகம் உண்டாகும். சொல்ப லாபம்கிட்டும். ஸௌகரியமுண்டாகும். ஆரோக்யவானுக இருப்பான்.

12 பனிரண்டாம் இடத்தில் ஶனி இருந்தால் ஜாதகனை வெட்கம்கெட்டவனுகவும், மூர்க்கனுகவும் சத்ருபாதை உள்ளவனுகவும், ரோகியாகவும் செய்வார்.

---

## ஸ்ரீ சனீச்சர அஷ்டோத்தர—
## சத நாமாவளி.

**ॐ शनैश्चराय नमः** ஓம் ஶனைஶ்சராய நம: – ஶனைஶ்சரர்

**शान्ताय नमः** ஶாந்தாய நம: — சாந்தர்

**सर्वाभीष्टप्रदायिने नमः** ஸர்வாபீஷ்ட ப்ரதாயினே நம: — எல்லா இஷ்டத்தையும் தருபவர்

**शरण्याय नमः** ஶரண்யாய நம: – சரணம் அடையத் தக்கவர்

**वरेण्याय नमः** வரேண்யாய நம: — சிறந்தவர்

**सर्वेशाय नमः** ஸர்வேஶாய நம: — எல்லோருக்கும் ஈசன்

**सौम्याय नमः** ஸௌம்யாய நம: – அழகானவர்

**सुरवन्द्याय नमः** ஸுரவந்த்யாய நம:—தேவர்களால் நமஸ்கரிக்கத் தக்கவர்

**सुरलोक विहारिणे नमः** ஸுரலோக விஹாரிணே நம: — தேவலோகத்தில் விளையாடுபவர்

**सुखासन उपविष्टाय नमः** ஸுகஆஸந உபவிஷ்டாய நம: .... ஸுக ஆஸநத்தில் உட்கார்ந்து இருப்பவர்

**सुन्दराय नमः** ஸுந்தராய நம; – அழகானவர்

**घनाय नमः** கநாய நம: — மேகமானவர்

ओं घनरूपाय नमः ஓம் கனரூபாய நம: — மேகவடிவமானவர்

घन आभरणधारिणे नमः கந ஆபரண தாரிணே நம: — அதிகமான ஆபரணமணிந்தவர்

घनसार विलेपनाय नमः கநஸாரவிலேபநாய நம: கற்பூர சந்தனம் பூசியவர்

खद्योताय नमः கத்யோதாய நம: — ஆகாசத்தில் ப்ரகாசிப்பவர்

मन्दाय नमः மந்தாய நம:—மந்தமானவர்

मन्द चेष्टाय नमः மந்த சேஷ்டாய நம: — மந்தமாகச் செல்பவர்

महनीय गुणात्मने नमः மஹநீய குணாத்மணே நம: — கொண்டாடத் தக்க குணமுள்ளவர்

मर्त्यपावन पादाय नमः மர்த்யபாவந பாதாய நம: — மனிதருக்கு பவித்ரமான பாதத்தைத் தருபவர்

महेशाय नमः மஹேஶாய நம: — மஹேஶ்வர ரூபி

छाया पुत्राय नमः சாயா புத்ராய நம: — சாயா தேவியின் புத்ரர்

शर्वाय नमः ஶர்வாய நம: — ஸுகம் அளிப்பவர்

शत तूणीर धारिणे नमः ஶத தூணீர தாரிணே நம: — நூறு பாணப் பெட்டிகளைத் தரிப்பவர்

चरस्थिरस्वभावाय नमः சர ஸ்திரஸ்வபாவாய நம: — சஞ்சலமாகவும் ஸ்திரமாகவும் உள்ள ஸ்வபாவம் வாய்ந்தவர்

अचंचलाय नमः அசஞ்சலாய நம: – அசையாதவர்

नीलवर्णाय नमः நீலவர்ணாய நம: — கறுப்புவர்ணமுள்ளவர்

नित्याय नमः நித்யாய நம:— நித்யமானவர்

नील अंजन निभाय नमः நீல அஞ்சந நிபாய நம: — கறு மலை போன்றவர்

नील अंबर विभूषाय नमः நீல அம்பர விபூஷாய நம: — கறுப்பான வஸ்த்ரமும் ஆபரணமும் உள்ளவர்

ओं निश्चलाय नमः ஓம் நிஶ்சலாய நம: — சலிக்காதவர்

वेद्याय नमः வேத்யாய நம: — அறியத்தக்கவர்

विधिरूपाय नमः விதிரூபாய நம:— ப்ரம்மரூபி

विरोध आधार भूमये नमः விரோத ஆதார பூமயே நம: — விரோதத்திற்கு ஆதாரமானவர்

भेद आस्पदस्वभावाय नमः பேத ஆஸ்பதஸ்வபாவாய நம: பேதம் உண்டாக்கும் ஸ்வபாவம் உள்ளவர்

वज्रदेहाय नमः வஜ்ரதேஹாய நம: — வஜ்ரம் போன்ற உடலுள்ளவர்

वैराग्यदाय नमः வைராக்யதாய நம: — வைராக்யத்தை அளிப்பவர்

वीराय नमः வீராய நம: — வீரர்

वीतरोगभयाय नमः வீதரோகபயாய நம: — ரோக பயத்தைப் போக்குபவர்

विपत्परं परेशाय नमः விபத்பரம்பரேஶாய நம: — ஆபத்துக் கூட்டத்திற்குத்தலைவன்

विश्ववन्द्याय नमः விஶ்வவந்த்யாய நம: — உலகத்தவர் நமஸ்காரம் செய்யத்தக்கவர்

गृध्रवाहनाय नमः க்ருத்ர வாஹனாய நம: — கழுகை வாஹனமாக உடையவர்

गूढाय नमः கூடாய நம: — ரஹஸ்யமானவர்

कूर्मांगाय नमः கூர்ம அங்காய நம: — ஆமைபோன்ற அங்கமுள்ளவர்

कुरूपिणे नमः குரூபிணே நம: —விகாரமான உருவமுள்ளவர்

कुत्सिताय नमः குத்ஸிதாய நம: — வெறுக்கத்தக்கவர்

गुण आढ्याय नमः குண ஆட்யாய நம:—குணம்நிறைந்தவர்

गोचराय नमः கோசராய நம: — பூமியிலும் நடப்பவர்

अविद्या मूलनाशनाय नमः அவித்யா மூலநாஶநாய நம: — அக்ஞானத்தின் காரணத்தை அழிப்பவர்

ओं अविद्यास्वरूपिणे नमः ஓம் அவித்யாஸ்வரூபிணே நம:— அவித்யா ரூபமானவர்

आयुष्यकारणाय नमः ஆயுஷ்யகாரணாய நம: — ஆயுஸுக் குக் காரணமானவர்

आपदुद्धर्त्रे नमः ஆபத் உத்தர்த்ரே நம: —ஆபத்திலிருந்து விடுவிப்பவர்

विष्णुभक्ताय नमः விஷ்ணுபக்தாய நம: — விஷ்ணுபக்தர்

वशिने नमः வஶினே நம: – தன்வஶமாக்குபவர்

विविध आगम वेदिने नमः விவித ஆகம வேதிநே நம: — பல வகையான ஶாஸ்த்ரங்களை அறிந்தவர்

विधिस्तुत्याय नमः விதிஸ்துத்யாய நம: – ப்ரும்மாவால் துதிக்கத்தக்கவர்

वन्द्याय नमः வந்த்யாய நம: — நமஸ்கரிக்கத்தக்கவர்

विरूप अक्षाय नमः விரூப அக்ஷாய நம:— க்ரூரமான கண் ணுள்ளவர்

वरिष्ठाय नमः வரிஷ்டாய நம: — சிறந்தவர்

गरिष्ठाय नमः கரிஷ்டாய நம: — மேலானவர்

वज्र अंकुशधराय नमः வஜ்ர அங்குஶதராய நம: — வஜ் ரத்தையும் அங்குஶத்தையும் தரிப்பவர்

वरदाय नमः வரதாய நம: — வரமளிப்பவர்

अभयहस्ताय नमः அபயஹஸ்தாய நம: — அபயஹஸ்தம் உள்ளவர்

वामनाय नमः வாமநாய நம: — குள்ளமானவர்

ज्येष्ठा पत्नी समेताय नमः ஜ்யேஷ்டா பத்நீ ஸமேதாயநம: ஜ்யேஷ்டை என்ற மனைவியுடன் கூடியவர்

श्रेष्ठाय नमः ஶ்ரேஷ்டாய நம:—ஶ்ரேஷ்டமானவர்

मित भाषिणे नमः மிதபாஷிணே நம: — மிதமாகப்பேசுபவர்

**ॐ कष्ट ओघनाशनाय नमः** ஓம் கஷ்ட ஓகநாஶநாயநம:-கஷ்டங்களை நாஶம் செய்பவர்

**आर्य पुष्टिदाय नमः** ஆர்ய புஷ்டிதாய நம: – சிறந்தவர்க்குப் புஷ்டியளிப்பவர்

**स्तुत्याय नमः** ஸ்துத்யாய நம: — துதிக்கத்தக்கவர்

**स्तोत्रगम्याय नमः** ஸ்தோத்ர கம்யாய நம: – ஸ்துதியால் அடையத்தக்கவர்

**भक्तिवश्याय नमः** பக்தி வஶ்யாய நம: — பக்திக்கு வஶமானவர்

**भानवे नमः** பாநவே நம; — ஸூர்யனுக இருப்பவர்

**भानुपुत्राय नमः** பாநுபுத்ராய நம; — ஸூர்ய புத்ரன்

**भव्याय नमः** பவ்யாய நம: — மங்களமானவர்

**पावनाय नमः** பாவநாய நம: — பவித்ரமானவர்

**धनुर्मण्डल संस्थाय नमः** தனுர்மண்டல ஸம்ஸ்தாய நம:— வில் போன்ற மண்டலத்தில் இருப்பவர்

**धनदाय नमः** தநதாய நம: — செல்வத்தை அளிப்பவர்

**धनुष्मते नमः** தநுஷ்மதே நம: — வில் உள்ளவர்

**तनुप्रकाश देहाय नमः** தநு ப்ரகாஶ தேஹாய நம: — சிறியதாயும் ப்ரகாஶமாயும் உள்ள உடல் பெற்றவர்

**तामसाय नमः** தாமஸாய நம: — தமோகுணமுள்ளவர்

**अशेष जन वन्द्याय नमः** அசேஷ ஜந வந்த்யாய நம: — எல்லா ஜனங்களாலும் வணங்கத் தக்கவர்

**विशेषफलदायिने नमः** விஶேஷ பலதாயிநே நம: — விஶேஷமாகப் பலத்தைத் தருபவர்

**वशीकृत जनेशाय नमः** வஶீக்ருத ஜநேஶாய நம:- ராஜாக்களைத் தன்வசமாக்கியவர்

**पशूनां पतये नमः** பஶூநாம் பதயே நம: — பஶுபதி

**खेचराय नमः** கேசராய நம: – ஆகாசத்தில் செல்பவர்

ओं घननीलांबराय नमः ஓம் கநநீல அம்பராயநம:-மேகம்போல கறுத்த வஸ்த்ரமுள்ளவர்

काठिन्य मानसाय नमः காடின்ய மாநஸாய நம: — கடின மான மநம் உள்ளவர்

आर्यगणस्तुत्याय नमः ஆர்யகணஸ்துத்யாய நம: — ஆர்ய ஸமூஹத்தால் துதிக்கத்தக்கவர்

नीलछत्राय नमः நீல சத்ராய நம: — கறுப்புக் குடை யுள்ள வர்

नित्याय नमः நித்யாய நம: —ஸதா இருப்பவர்

निर्गुणाय नमः நிர்குணாய நம: — குணமில்லாதவர்

गुणात्मने नमः குணாத்மனே நம: — குணவடிவன்

निरामयाय नमः நிராமயாய நம: — ரோயில்லாதவர்

नन्द्याय नमः நந்த்யாய நம: — கொண்டாடத் தக்கவர்

वन्दनीयाय ममः வந்தநீயாய நம: — நமஸ்கரிக்கத்தக்கவர்

धीराय नमः தீராய நம: — தீரன்

दिव्य देहाय नमः திவ்ய தேஹாய நம: — ப்ரகாசிக்கும் உடலுள்ளவர்

दीनार्ति हरणाय नमः தீந ஆர்த்தி ஹரணாய நம: - ஏழை களின் துன்பத்தை அகற்றுபவர்

दैन्य नाशनाय नमः தைன்ய நாஶநாய நம: — எழ்மையை நீக்குபவர்

आर्यजनगण्याय नमः ஆர்ய ஜனகண்யாய நம:- உயர்ந்தவர் களால் கொண்டாடத் தக்கவர்

क्रूराय नमः க்ரூராய நம: — க்ரூரமானவர்

क्रूरचेष्टाय नमः க்ரூர சேஷ்டாய நம: — க்ரூரமான செயலுள்ளவர்

कामक्रोधकराय नमः காமக்ரோதகராய நம: —காமக்ரோத ங்களைச் செய்பவர்

**ओं कलत्र पुत्र शत्रु कारणाय नमः** ஓம் களத்ர புத்ர ஶத்ரு காரணாய நம: — மனைவி மக்கள் சத்ரு இவர்களை உண்டு பண்ணுபவர்

**परिपोषित भक्ताय नमः** பரிபோஷித பக்தாய நம: — பக்தரைப் பரிபோஷிப்பவர்

**परभीतिहराय नमः** பரபீதிஹராய நம: — ஶத்ருபயத்தைப் போக்குபவர்

**भक्त संघ मनोभीष्ट फलदाय नमः** பக்தஸங்க மநோபீஷ்ட பலதாய நம: — பக்தர்களின் இஷ்டத்தை அளிப்பவர்

ஸ்ரீ ஶனைஶ்சர அஷ்டோத்தர சதநாம ஸம்பூர்ணம்



ஸ்ரீ முத்துஸாமி தீக்ஷிதர் இயற்றிய

## சனைச்சர க்ரஹ கீர்த்தனம்.



பல்லவி

திவாகர தநுஜம் ஶனைஶ்சரம் தீரதரம் ஸந்ததம்
சிந்தயேஹம் (திவா)

அநுபல்லவி

பவாம்பு நிதௌ நிமக்ன ஜநாநாம் பயங்கரம் அதி
க்ரூர பலதம்
பவானீஶ கடாக்ஷ பாத்ர பூத பக்திமதாம்
அதிஶய ஶுப பலதம் (திவா)

சரணம்

காலாஞ்ஜந காந்தியுக்த தேஹம் காலஸஹோதரம்

காக வாஹநம் நீலாம் ஶுக புஷ்பமாலா வ்ருதம்
நீலரத்ந பூஷண அலங்க்ருதம்

மாலிநீ விநுத குருகுஹ முதிதம் மகர கும்ப ராஶி
நாதம் திலதைல மிஶ்ரிதான்ன தீபப்ரியம் தயா
ஸுதா ஸாகரம் நிர்பயம்

கால தண்ட பரிபீடித ஜாநும் காமிதார்த்த
பலத காம தேநும் கால சக்ர பேத சித்ரபாநும் கல்பித
சாயா தேவீ ஸூநும் (திவா)

## சனி கீர்த்தனையின் அர்த்தம்.

ஸூர்யனின் புத்ரரும் தைர்யமுள்ளவரும், ஸம்ஸாரக் கடலில் மூழ்கியவருக்கு பயங்கரமானவரும் கடுமையான பலனைத்தருபவரும் ஶிவனது கடாக்ஷத்திற்குப்பாத்ரமான பக்தருக்கு அதிகமான ஶுப பலனைத்தருபவரும் மையை போல் கரும் காக்கை வாஹநம் உள்ளவரும் கறுப்பான வஸ்த்ரத்தாலும் புஷ்பத்தாலும் அலங்கரிக்கப் பட்டவரும் மாலிநீ மந்த்ரத்தால் துதிக்கின்ற குருகுஹருக்கு இன்பம் அளிப்பவரும், மகர கும்ப ராசிகளுக்கு அதிபதியும் எள்ளு அன்னத்திலும் நல்லெண்ணை திபத்திலும் ப்ரியம் உள்ளவரும் கருணைக் கடலானவரும் பயமற்றவரும் யம தண்டத்தினால் வருந்தும் முழங்கால் உள்ளவரும் இஷ்டத்தை அளிக்கும் காமதேனுவும் கால சக்ரத்தைப் பிளக்கும் ஸூர்யன் போன்றவரும் நிழலால் கல்பிக்கப்பட்ட சாயா தேவியிடம் பிறந்தவருமான ஶனைஶ்சரனை எப்பொழுதும் த்யாநம் செய்கிறேன்.

ஸ்ரீ ஶனைஶ்சர க்ரஹாய நம:

---

# ஸ்ரீ சனைச்சர அஷ்டகம்.

[இதை தினம் காலையில் 3 முறை பாராயணம் செய்தால் மழை உண்டாகும். எல்லோரும் படிக்கவும்.]

अस्य श्री शनैश्वर स्तोत्रस्य दशरथ ऋषिः । शनैश्वरो देवता ।
त्रिष्टुप् छन्दः । शनैश्वर प्रीत्यर्थं जपे विनियोगः ॥

அஸ்ய ஸ்ரீ ஶனைஶ்சரஸ்தோத்ரஸ்ய தஶரத ருஷி: ஶனைஶ்சரோ-
தேவதா ।
த்ருஷ்டுப் சந்த: ஶனைஶ்சர ப்ரீத்யர்த்தம் ஜபே விநியோக:

दशरथ उवाचः தசரத உவாச:—

कोणोऽन्तको रौद्रयमोऽथ बभ्रुः कृष्णः शनिःपिङ्गलमन्दसौरिः ।
नित्यं स्मृतो यो हरते च पीडां तस्मै नमः श्री रविनन्दनाय ॥

கோணோऽந்தகோ ரௌத்ரயமோऽதபப்ரு:
க்ருஷ்ண: ஶனி: பிங்கல மந்த ஸௌரி: |
நித்யம் ஸ்ம்ருதோ யோ ஹரதே ச பீடாம்
தஸ்மை நம: ஸ்ரீ ரவி நந்தநாய ॥ 1 ॥

सुरासुराः किंपुरुषोरगेन्द्राः गन्धर्वविद्याधरपन्नगाश्च ।
पीड्यन्ति सर्वे विषमस्थितेन तस्मै नमः श्री रविनन्दनाय ॥

ஸுராஸுரா: கிம்புருஷோரகேந்த்ர:
கந்தர்வ வித்யாதர பன்னகாஶ்ச |
பீட்யந்தி ஸர்வே விஷமஸ்திதேந
தஸ்மை நம: ஸ்ரீரவி நந்தநாய ॥ 2 ॥

नरा नरेन्द्राः पशवो मृगेन्द्राः वन्याश्च ये कीटपतङ्गभृङ्गाः ।
पीड्यन्ति सर्वे विषमस्थितेन तस्मै नमः श्रीरवि नन्दनाय ॥

நரா நரேந்த்ரா: பஶவோ ம்ருகேந்த்ரா:
வந்யாஶ்ச யே கீடபதங்க ப்ருங்கா:
பீட்யந்தி ஸர்வே விஷமஸ்திதேந
தஸ்மை நம: ஸ்ரீரவி நந்தநாய ॥ 3 ॥

देशाश्च दुर्गाणि वनानि यत्र सेनानिवेशाः पुरपत्तनानि ।
पीड्यन्ति सर्वे विषमस्थितेन तस्मै नमः श्री रविनन्दनाय ॥

தேஶாஶ்ச துர்க்காணி வநாநி யத்ர
ஸேனநிவேஶா: புரபத்தநாநி |
பீட்யந்தி ஸர்வே விஷமஸ்திதேந
தஸ்மை நம: ஸ்ரீ ரவிநந்தநாய ॥ 4 ॥

तिलैर्यवैः माषगुडान्नदानैः लोहेन नीलांबरदानतो वा ।
प्रीणन्ति मन्त्रै र्निजवासरेच तस्मै नमः श्री रविनन्दनाय ॥

திலைர்யவை: மாஷகுடாந்ந தானை:
லோஹேந நீலாம்பர தானதோ வா |
ப்ரீணந்தி மந்த்ரை: நிஜவாஸரே ச
தஸ்மை நம: ஸ்ரீ ரவிநந்தநாய ॥ 5 ॥

प्रयागकूले यमुनातटे च सरस्वती पुण्यजले गुहायाम् ।
यो योगिनां ध्यानगतेऽपि सूक्ष्मः तस्मै नमः श्रीरविनन्दनाय ॥

ப்ரயாககூலே யமுனதடேச ஸரஸ்வதீ புண்ய ஜலேகுஹாயாம்
யோ யோகினும் த்யான கதேऽபிஸூக்ஷ்ம: தஸ்மை நம: ஸ்ரீரவி
நந்தநாய ॥ 6 ॥

अन्य प्रदेशात् स्वगृह प्रविष्टः तदीयवारे स नरः सुखी स्यात् ।
गृहाद्गतो यो न पुनः प्रयाति तस्मै नमः श्री रविनन्दनाय ॥

அந்ய ப்ரதேஶாத் ஸ்வக்ருஹ ப்ரவிஷ்ட:
ததீயவாரே ஸ நர: ஸுகீஸ்யாத் |
க்ருஹாத் கதோ யோ ந புன: ப்ரயாதி
தஸ்மை நம: ஸ்ரீ ரவிநந்தநாய ॥ 7 ॥

स्रष्टा स्वयम्भूः भुवनत्रयस्य त्राता हरीशो हरते पिनाकी ।
एकस्त्रिधा ऋग्यजुः साममूर्तिः तस्मै नमः श्री रविनन्दनाय

ஸ்ரஷ்டா ஸ்வயம்பூ: புவனத்ரயஸ்ய
த்ராதா ஹரீஶோ ஹரதே பிநாகீ
ஏகஸ்த்ரிதா ருக்யஜுஸ் ஸாமமூர்த்தி:
தஸ்மை நம: ஸ்ரீ ரவிநந்தநாய ॥ 8 ॥

शन्यष्टकं यः प्रयतः प्रभाते नित्यं सुपुत्रैः पशुबान्धवैश्च ।
पठेत्तु सौख्यं भुवि भोगयुक्तः प्राप्नोति निर्वाणपदं तदन्ते ॥

ஶந்யஷ்டகம் ய: ப்ரயத: ப்ரபாதே
நித்யம் ஸுபுத்ரை: பஶுபாந்தவைஶ்ச ।
படேத்து ஸௌக்யம் புவி போகயுக்த:
ப்ராப்னோதி நிர்வாண பதம் ததந்தே ॥ 9 ॥

कोणस्थः पिङ्गलो बभ्रुः कृष्णो रौद्रोऽन्तको यमः ।
सौरिः शनैश्चरो मन्दः पिप्पलादेन संस्तुतः ॥

கோணஸ்த: பிங்கலோ பப்ரு: க்ருஷ்ணோ
ரௌத்ரோऽந்தகோ யம: ।
ஸௌரி: ஶனைஶ்சரோ மந்த:
பிப்பலாதேந ஸம்ஸ்துத: ॥

एतानि दश नामानि प्रातरुत्थाय यः पठेत् ।
शनैश्चरकृता पीडा न कदाचिद्भविष्यति ॥

ஏதாநி தஶ நாமாநி ப்ராதருத்தாய ய: படேத் ।
ஶனைஶ்சரக்ருதா பீடா ந கதாசித் பவிஷ்யதி ॥

ஸ்ரீ ஶனி அஷ்டகம் ஸம்பூர்ணம்.

# நவக்ரஹ க்ஷேத்திரங்களில் — சனிபகவான்.

## திருநள்ளாறு — ஸ்ரீ சனைச்சரன்.

"சித்ரகலாநிதி" N. கிருஷ்ணன்,

நவக்ரஹங்களில் ஏழாவதாக வருவது சனிபகவான். இவர் சூரியனுக்கும் சாயாதேவிக்கும் தோன்றியவர். சனைச்சரன் காசி க்ஷேத்திரத்திற்குச் சென்று தன் பெயரினால் ஒரு லிங்கத்தை ஸ்தாபித்து பூஜைசெய்து வழிபட்டான் என்றும் அதன் பயனாக கிரக பதவியை அடைந்தான் எனவும் கூறப்படுகிறது.

சனைச்சரன், தமிழ் நூல்களில் மந்தன், பிணிமுகன், முதுமகன், முடவன், காரி என்றும்பல பெயர்களில் வழங்கப்படுகிறார். சனி பகவானுக்கு ஒரு கால் சற்று சிறுத்து இருத்தலின் மெல்லநடப்பான். அதன் காரணமாக சனைச்சரன் எனப்பெயர் வந்ததாகக் கூறப்படுகிறது. சனைச்சரனைப்பற்றிச் சொன்னாலே எல்லோருக்கும் சற்றுபயம் தான் வருகிறது. காரணம் சனி பகவானால் உண்டாகும் துன்பங்களைக் கண்டே மக்கள் அஞ்சுகிறார்கள். அத்துன்பங்கள் நீங்கவே மக்கள் சனிபகவானை வழிபடுவதை நாம் பார்த்திருக்கிறோம். பொதுவாக, ஆலயவழிபாட்டிற்குச் செல்லும் மக்கள் நவக்கிரஹங்களுக்கு, அதிலும் முக்கியமாக, சனிபகவானுக்குக்கூட்டமாக வழிபாடு செய்வதைக் காணலாம். சனிபகவானால் ஏற்படும் துன்பங்களிலிருந்து விடுபடவே மக்கள் பயபக்தியுடன் வழிபாடு செய்கிறார்கள்.

இந்த சனிபகவான் திருநள்ளாறு க்ஷேத்திரத்தில் தர்பாரண்யேஸ்வர மூர்த்தியை ஸ்தாபித்து வழிபட்டுத் தன் ஸ்வரூப பிம்பத்தினடியில் தனது யந்திரத்தையும்

ஸ்தாபித்துக்கொண்டு தன்னை வழிபடுபவர்களுக்கெல்லாம், நன்மை செய்துகொண்டு திகழ்கிறார்.

இந்த திருநள்ளாறு க்ஷேத்திரம் அரிசலாற்றுக்கும் வாஞ்சை நதிக்கும் இடையில் பேரளம் புகைவண்டி நிலையத்திலிருந்து காரைக்கால் செல்லும் வழியில் உள்ளது. இது சப்தவிடங்கத் தலங்களுள் ஒன்றாக விளங்குகிறது. இத் தலத்து விடங்கத் தியாகரின் திருநாமம் நக விடங்கர் என்பதாகும். இங்கு இறைவன் ஆடிய நடனம் உன்மத்த நடனம் எனப்படும். ஆதியில் இங்கு பிரம்மதேவன் பூஜை செய்ததால் ஆதிபுரி எனவும், தல விருக்ஷம் தருப்பையாதலால் "தருப்பாரண்யம்" எனவும் இங்கு முசுகுந்த சக்ரவர்த்தி நக விடங்கரை பிரதிஷ்டை செய்தமையால் நக விடங்கபுரம் எனவும் சனிபகவானின் கொடுமைக்கு ஆளாகிய நள சக்ரவர்த்தி இந்த க்ஷேத்திரத்திற்கு வந்து வழிபட்டு இன்பம் பெற்றமையால் நளேச்சுரம் எனவும் பெயர்கள் வழங்கப்படுகின்றன. இது நள மகாராஜனுக்கு நன்னெறி காட்டிய தலமாதலின் "நள்ளாறு" எனப் பெயர்பெற்றது.

கோயில், ஊரின் மத்தியில் நான்கு பெரிய வீதிகளுக்கும் நடுவே அமைந்துள்ளது. இத்தலத்திறைவருக்கு ஆதிமூர்த்தி, தர்ப்பாரண்யேஸ்வரர், நள்ளாறர் எனப் பெயர்கள் உண்டு. அம்பிகையின் பெயர், போகமார்த்தபூண்முலையாள், பிராணேஸ்வரி எனப் பெயர்கள் வழங்கப்படுகின்றன. இத் தலத்தில் சனிபகவான் மிகச் சிறப்புடையதும் மூர்த்திகரமுடையதுமாகும். சனைச்சரன் சந்நிதி அம்மன் சந்நிதிக்கு முன்புறம் உள்ளது.

இத் தலத்திலுள்ள விசேஷமான தீர்த்தங்கள், பிரம தீர்த்தம், வாணி தீர்த்தம், அன்ன தீர்த்தம், அகத்திய தீர்த்தம், நள தீர்த்தம், நள கூபம் எனப் பல உண்டு. நள தீர்த்தத்தில் மூழ்குவோர்க்கு எல்லா கிரஹ தோஷங்களும் பீடைகளும் நிவர்த்தியாகும். இதற்கு அண்மையில்

"நள கூபம்" உள்ளது. இந்த தீர்த்தம் இறைவனுல் நளன் பொருட்டு தனது சூலாயுதத்தால் உண்டாக்கி இதில் காசிக் கங்கையை வருவித்ததாகக் கூறப்படுகிறது. அக் கூபத்தைத் தரிசிப்பதன்றி, முழுகும் வழக்கமில்லையென்று புராணம் கூறும். இந்த தீர்த்தத்தைத் தலையில் தெளித்துக் கொள்ளுகின்றனர் மக்கள். நளனின் சரித்திரம் யாவரும் அறிந்ததே. நளனுக்குக் கலி நீங்கிய தலம் திருநள்ளாறு; சனிபகவானின் பீடனத்தால் துன்புற்றவர்கள் பலர், நளன் சனிபகவானின் தொடர்பால் மிகவும் துன்புற்று அப்பால் அவன் கலி நீங்கி இன்பம் அடைந்தான்.

சனிபகவான் ஒரு ராசியிலிருந்து மற்றெரு ராசிக்குச் செல்லும்போது "சனிப் பெயர்ச்சி" கொண்டாடப்படுகிறது. அது சமயம் மக்கள் சனிபகவானுக்கு விசேஷ பூஜைசெய்து எள், நெய் விளக்கு ஏற்றி வழிபடுவார்கள். சனிபகவானைக்கண்டு பயப்படாதவர்கள் கிடையாது; இத் தலத்திலுள்ள, தர்ப்பாரண்யேஸ்வரரையும், போகமார்த்த பூண்முலையாம்பிகையையும், அப்பர், சம்பந்தர், சுந்தரர் ஆகிய மூவரும் பாடியுள்ளார்கள். இங்கு சமணர்கள் வாதத்தால் தீயில் வெந்துபோகாமல் ஏடுகள் பசுமையாகக் காட்சியளிக்கின்றன.

இத் தலத்திறைவனை திருமால், பிரமன், இந்திரன், முசுகுந்தன் அஷ்டதிக் பாலகர், முதலியோரும், அகத்தியர், முதலிய ஸப்தரிஷிகளும் அர்ச்சுனன், நளன், கலிங்காதிபதி, உருசிராசன். வாணி, அன்னப்பறவை முதலியோர்களும் பூஜித்துப் பற்பல வரங்களைப் பெற்றுள்ளார்கள்.

சனிபகவானுக்கு விசேஷ பெருமை உள்ள இந்தத் தலத்தின் மகிமை அளவிட முடியாததாகும்.

சனி பகவானை ஆயுஷ்காரனைக் கூறுவது சோதிட நூல். இவரை வழிபட்டு இவருடைய அருளுக்குப் பாத்திரமானல் நீண்ட ஆயுளுடன் சுகமாக வாழலாம்.

சனிச்சரனைப்போல் கொடுப்பவரும் இல்லை. கெடுப்பவரும்இல்லை.

சனி பகவானால் ஏற்படும் கோசார தோஷங்கள், தசாபுக்தி தோஷங்கள் மற்றும்பல பீடனங்களுக்கு உள்ளானவர்கள் திருநள்ளாறு க்ஷேத்திரம் வந்து தர்ப்பாரண்யேஸ்வரரை வணங்கி, இங்குள்ள சனிச்சரனை வழிபாடுசெய்தால் வாழ்க்கையில் ஏற்பட்ட பல இன்னல்கள் நீங்கி, நன்மையடைவார்கள் என்பது திண்ணம்.

---

Printed & Published by A. Venkataraman at Sri Meenakshi Press, Kadavasal.
Editor : Srivathsa, V. Somadeva Sarma.